க. நா. சுப்ரமண்யம்

ஆசிரியரின்
மற்ற நூல்கள்

ஆட்கொல்லி —(நாவல்)
நல்லவர் —(நாடகம்)
முதல் ஐந்து நாவல்கள்—(விமரிசனம்)
படித்திருக்கிறீர்களா-I — ,,
படித்திருக்கிறீர்களா-II — ,,
கடல் முத்து
— (நான்கு அயல் நாட்டுக்கதைகள்)

# முன்னுரை

இலக்கிய விசாரம் என்பது சற்றுக் கனமான விஷயம் தான். அதைச் சுவைபடச் செய்ய வேண்டிய அவசியம் ஆரம்பத்தில் இன்றுள்ள நிலையில் உண்டு. கதைகள், நாவல்கள், நாடகங்கள் என்று எழுதும் ஆசிரியன் வாசகனை நினைத்துக் கொண்டு எழுதக்கூடாது என்கிற கட்சியைச் சேர்ந்தவன் நான் எழுதி முடித்த பிறகு வாசகன் வரலாமே தவிர, அதற்கு முன் இலக்கியாசிரியன் முன் அவன் வரக் கூடாது; வந்தால் அவன் எழுத்துத் தரம் குறைகிறது. ஆனால் இலக்கிய விசாரம் செய்யும்போது மட்டும் எந்த இலக்கியாசிரியனும் வாசகனை மனத்தில் வைத்துக் கொண்டுதான் செய்தாக வேண்டும். இப்படிச் செய்கிற இலக்கிய விசாரத்தை ஒரு லக்ஷிய விசாரகனுக்கும் வாசகனுக்கும் நடக்கிற சம்பாஷணை உருவத்திலே செய்தால் நன்றாக வருமே என்று எனக்குப் பல நாட்க ளாகவே ஒரு நினைப்பு.

ஜியார்ஜ் மூர் என்கிற ஆங்கில இலக்கியாசிரியர் Conversations in Ebury Street என்று லேசாக ஆங் கிலச் சம்பாஷணைகள் மூலம் இலக்கிய விசாரம் செய்து பார்த்திருக்கிறார். அதைப் படிக்கும்போது, அதே மாதிரி நானும் செய்து பார்க்கலாமே என்று எனக்குத் தோன்றிய துண்டு. நண்பர் புதுமைப்பித்தன் பதிப்பித்த 'தினமணி ஆண்டு மல'ரிலே இலக்கியச் சோலை என்று ஒரு சம்பாஷணை எழுதினேன். அது திருப்திகரமாகவே அமைந்தது. ஒரே நோக்கை மட்டும் எடுத்துச் சொல்லாமல், எதிர்க் கட்சியை யும் கூடிய மட்டும் எடுத்துச் சொல்லி விடமுடிகிறது என் பது இந்தச் சம்பாஷணை உருவத்தின் ஒரு வசதி. அதே போலப் பல வருஷங்களுக்குப் பிறகு பாரதியாரைப் பற்றி

என்று பி. ஸ்ரீ. ஆசாரியா அப்போது நடத்திக் கொண்டிருந்த 'லோகோபகாரி'யில் ஒரு சம்பாஷணை எழுதினேன். அதுவும் எனக்குத் திருப்திகரமாகவே வந்தது.

இந்த இலக்கிய விசாரம் என்கிற விஷயத்தைச் சம்பாஷணை உருவத்தில் நான் 1945, 1946ல் திட்டமிட்டேன். உலக இலக்கியம் பூராவும் சுற்றி வரவும், கனமான விஷயங்களை லேசாகக் சொல்லவும், அவசியமானபோது பேச்சு விஷயத்துக்குத் திருப்பம் தரவும் சம்பாஷணை உருவம் மிகவும் லாயக்கானது என்பது இதை எழுதிய பிறகு எனக்கே முன்னைவிட அதிகமாகத் தீர்மானமாயிற்று. இந்த உருவத்திலே தொடர்ந்து இலக்கிய விசாரத்தைச் செய்து வரவே நான் உத்தேசித்திருக்கிறேன்.

எந்த மொழியிலுமே இலக்கிய விசாரத்தின் ஆரம்ப காலத்திலே சில சிரமங்கள் உண்டு. சில வார்த்தைகளை நாம் எந்த அர்த்தத்தில் உபயோகிக்கிறோம் என்பது வாசகனுக்குத் தெளிவாகாத விஷயமாக இருக்கிறது. பழக்கத்தால் தான் அதை அவன் அறிந்துகொள்ள முடியும். வேதாந்தம், சைவ சிந்தாந்தம், போன்ற துறைகளில் உள்ளதுபோல இலக்கிய விசார உலகமும் சங்கேத வார்த்தைகள் நிரம்பியது. நம்மிடையே தமிழில் இலக்கிய விசாரம் செய்ய ஆரம்பிப்பவர்கள் மேலை நாடுகளில், முக்கியமாக ஆங்கிலம் வழங்கும் பிரதேசத்தில், உபயோகமாகும் சங்கேத வார்த்தைகளை அப்படியே மொழிபெயர்த்து உபயோகித்து விடுகிறார்கள். ஆங்கில, பிறமொழி சங்கேத வார்த்தைகள் எதுவும் வராமல் விமரிசனம் செய்யவேண்டும் -தமிழுக்கு என்று தனியாக இலக்கிய விசார சங்கேதங்கள் ஏற்படும் வரையில் என்பது என் அபிப்பிராயம். இல்லாவிட்டால் தமிழ் இலக்கிய விசாரம் ஆங்கில, ஐரோப்பிய இலக்கிய விசாரத்தின் நிழலாகவே இருக்கும்; தனி உருவம்பெறாது.

இந்த வழக்குக்குப் பண்டிதர்கள் தான் முதல் பலியாகிருர்கள்-ஒரு பண்டிதர் lyric என்கிற ஆங்கில சங்கேத பதத்திற்குத் தமிழ் அர்த்தம் தருவதற்காகப் படாதபாடு படுகிருர். வேறு ஒருவர் நனவோடை இலக்கியம் என்று Stream of Conciousness என்கிற ஒரு இலக்கிய நாவல் உத்தியை ஒரு இலக்கியமாகவே நினைத்துக் கட்டுரை எழுதுகிருர். இதிலே Consciousness என்பதே ஒரு தனிச் சாஸ்திரத்தின் தனிச் சங்கேதம். இலக்கியத்துக்கு வரும்போது அது எப்படி எப்படியோ மாறுகிறது. நமது பேராசிரியர் எழுதுவதற்கும், Stream of Consciousness என்று மேலை நாட்டார் சொல்வதற்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது என்பது வெளிப்படை விஷயம் தெரிந்தவர்களுக்கு.

இப்படியெல்லாம் இலக்கிய விசாரத்தை வளரவிடக் கூடாது. தமிழில் சிறுகதையும், நாவலும் இன்று தமிழ் உருவம்பெற வேண்டும் என்கிற ஆசை உள்ளவன் நான். இலக்கிய விமரிசனமும் தமிழ் உருவம் பெறவேண்டும் என்கிற ஆசை நிறைவேற இலக்கிய விசாரம் என்கிற இச் சிறு நூல் நான் கட்டுகிற முதல் படி.

திருவல்லிக்கேணி
10—8—58

க. நா. சுப்ரமண்யம்

# இலக்கிய விசாரம்

ராஜா: வா, மணி, வா.

மணி: என்ன எழுதிக்கொண்டிருக்கிறாய்?

ராஜா: 'வா மணி வா' என்று எழுதத் தொடங்கினேன். உனக்கும் எனக்கும் இலக்கியத்தைப் பற்றி நீண்ட சம்பாஷணை நடப்பதாக எழுதுகிற உத்தேசம்.

மணி: இலக்கியத்தைப் பற்றியா? நீயும் நானும் இப்பொழுது இலக்கியத்தைப் பற்றிப் பேசவேண்டிய அவசியம் என்ன? வேறு பேச விஷயம் அகப்படாதென்பதினலா? அல்லது இலக்கியம் இன்று இந்த சந்தர்ப்பத்தில் மிகவும் அவசியம் என்பதனலா?

ராஜா: இலக்கியம் என்றுமே அவசியம்தான். இன்று மட்டும்தான் அதி அவசியம் என்று யார் எப்படிச் சொல்ல முடியும்?

மணி: இலக்கியத்தைப் பற்றிப் பேசவேண்டிய அவசியத்தைப் பற்றிக் கேட்டேன்—இலக்கியத்தின் அவசியம் எனக்கும் தெரியுமே.

ராஜா: இலக்கியத்தைப் பற்றிப் பேசுவதற்குச் சம்பாஷணை மிகவும் சிறந்த உருவம் என்பதை உணர்ந்துதான் நான் இலக்கிய விசாரத்தைச் சம்பாஷணை

ரூபத்திலே செய்து பார்க்கலாம் என்று தொடங்கினேன். உனக்குத் தெரிந்ததையும் எனக்குத் தெரிந்ததையும் மாறிமாறிச் சொல்லிக்கொண்டு வந்தால் பல விஷயங்கள் பல கோணங்களிலிருந்து தெளிவாவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். நம் பேச்சாகவே நாம் இலக்கிய விசாரத்தைச் செய்வோம். இலக்கியத்தின் அவசியம், இலக்கியத்தைப் பற்றிப் பேசுவதன் அவசியம் எல்லாவற்றையுமே பேசிப் பார்க்கலாமே!

மணி: எனக்கொன்றும் ஆக்ஷேபமில்லை. ஆனால் நீயோ புஸ்தகம் என்று சொல்லப்படுவதையெல்லாம் கரைத்துக் குடித்தவன். பல நூல்களைத் தேடி விரும்பிப் படித்தவன் நீ. என் படிப்பு மிகவும் சொல்பம்தான். நீ சொல்வதிலிருந்து நான் பல விஷயங்களைக் கற்றுக்கொள்ள முடியும். நான் சொல்வதிலிருந்து நீ என்ன தெரிந்துகொள்ளுவாயோ, அது கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

ராஜா: நீ சொல்வது உண்மையென்றே ஏற்றுக்கொண்டு மேலே சொல்ல எனக்கும் மனமுண்டு. ஆனால் நீ சொல்வது பூராவும் உண்மையல்ல. வேறு வேலையே எதுவும் செய்யாமல் எப்போதுமே படித்துக்கொண்டிருந்தாலும்கூட, எல்லாவற்றையும் படித்துவிட முடியாது என்பது முதல் விஷயம். அப்படி எல்லாவற்றையும் படித்துவிட்டாலும் விஷயத் தெளிவு ஏற்பட்டு விடாது என்பது இரண்டாவது விஷயம். படிப்பின் விஸ்தீரணம் குறைவாக இருந்தாலும் ஆழம் அதிகமாக இருப்பது சில சமயம் நல்லது.

மணி: நான் அப்படி ஆழ்ந்து எதையும் படித்திருப்ப தாக நீ சொன்னல் எனக்குப் பெருமைதான். ஆனல் அப்படி ஒன்றும் படித்திருப்பதாக எனக்குச் சொல்லிக்கொள்ளத் தைரியமில்லை.

ராஜா: ஒன்று ஒப்புக்கொள்ளலாம் தற்பெருமையோ சிறுமையோ சிறிதுமின்றி.

மணி: என்ன ?

ராஜா: இலக்கியப் பரப்பு என்பது மிகவும் பெரியது. கற்றது கைம்மண்ணளவு என்பதும், உள்ளது கட லளவு என்பதும் இன்று உண்மை என்றுதான் சொல்லவேண்டும். ஒருவரால் தனியாக இக்கடலைப் பூராவும் கடப்பது என்பது மிகவும் சிரமசாத்தியமான காரியம், முடியாது என்றே சொல்லலாம்.

மணி: பின்னர் படித்தவர் என்று ஒரு சிலரைச் சிறப் பாகச் சொல்வது தவறு என்கிருயா ?

ராஜா: இல்லை. ஓரளவு படித்தவர் மற்றதை ஊகிக்க முடிகிறது. படிக்காததைப்பற்றி ஓரளவு உணக்கை இருக்கிறது, அதுபோதும். படித்த அளவில் ஒரு ரஸனையைக் கொண்டு மற்றதையும் ரஸிக்க முடியும், ரஸித்து விடலாம் என்று தீர்மானித்துக் கொள்ள முடியும். கடல் பெரிதுதான். ஆனல் படகுகொண்டு கடக்கமுடியும் என்கிற நம்பிக்கை இருக்கிறதே அது மிகவும் முக்கியம்.

மணி: கடல் பெரிது என்று அறிந்தவன் பயப்படுவ தற்கும், கடல் இருப்பதையே அறியாதவன் பயப் படுவதற்கும் வித்தியாசம் இருக்கிறது என்கிருய் ?

ராஜா: ஆமாம். இலக்கியக்கடலை அறிந்து அணுகவே இலக்கிய விசாரம் என்கிற தோணி மிகவும் அவசியம் என்று சொல்ல வந்தேன் நான்.

மணி: இலக்கிய விசாரம் என்கிற தோணியைச் செலுத்தத் தெரிந்தவன் இலக்கியக் கடலைக் கண்டு பயப்படமாட்டான் என்கிருய் ?

ராஜா: பரப்பைக் கண்டு பயப்படுவது உண்மையே! ஆனல் பயம் என்கிற ஒரு உணர்ச்சி மட்டும்தானு உண்டு. இலக்கியத்திலே நவ ரஸங்களும்தான் உண்டு. ரஸ அநுபவத்தை மீறிய ஒரு சாந்தியும் தான் உண்டு. அவற்றையெல்லாம் அறிய, அறிந்து அநுபவிக்க, இலக்கிய விசாரம் என்கிற தோணி நமக்கு உதவும்.

மணி: கடல், தோணி, பரப்பு, ஆழம் என்று பொதுவாகப் பேசுவதிலே லாபம் என்ன ? இலக்கிய விசாரத்தைப் பொதுப்படச் செய்து யாருக்கு என்ன லாபம் ?

ராஜா: குறிப்பிட்டுச் சொல்லு உன் மனத்திலுள்ளதை.

மணி: இலக்கியக் கடல் உலகம் பூராவும் பரந்து கிடக்கிறது. அதிலே பல மொழி இலக்கியங்கள் படர்ந்து கிடக்கின்றன. ஒவ்வொரு மொழியிலுமே பல இலக்கியத்துறைகள், காவியம், கவிதை, நாடகம், சிறுகதை, நாவல், கட்டுரை என்று. இதிலே எந்த மொழியில் எங்கே தொடங்குவது நம் இலக்கிய விசாரத்தை? எப்படி எத்திசையில் நடப்பது என்று நாம் தீர்மானித்துக்கொள்ள வேண்டாமா ?

ராஜா: இதிலே நாம் புதிதாகத் தீர்மானிக்க வேண்டிய விஷயம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரிய

வில்லை. நாம் இருவரும் தமிழர்கள். அந்த ஒரு உண்மையிலேயே அடங்கிவிட்டது நம் இலக்கிய விசாரம் எங்கே தொடங்கவேண்டும் என்பது.

மணி: உண்மைதான். ஆனால் நமக்கு இலக்கியத் துறைகளில் எல்லாம் இன்று விழிப்பு ஏற்பட்டிருப் பதே ஆங்கில பரிச்சிய மூலம்தான் என்று சொல் வது மிகையாகாது.

ராஜா: அது ஓரளவு உண்மை. பூராவும் உண்மை அல்ல. ஆனால் தமிழும் உலகத்திலுள்ள எல்லா இலக்கியத்துக்கும் இன்று வாரிசுதான். ஆகவே தமிழில் தொடங்கினாலும் நம்முடைய இலக்கிய விசா ரம் உலகத்து இலக்கியம் பூராவையும் தழுவியதாகத் தான் இருக்கவேண்டும்.

மணி: நான் சொல்ல வந்ததையே வேறுவிதமாக சுருக்கு வழியில் சொல்லிவிட்டாய். தமிழ்மொழி இலக்கியம் இன்று இவ்வுலகில் தனித்தியங்க முடி யாது. ஒரே உலகம் என்கிற உலக உணர்ச்சி அரசி யலில் நிச்சயமாக இன்றில்லை. அது உண்மையானா லும் இலக்கியங்களில் நிச்சயமாக இருக்கிறது— இருந்தேதான் தீரவேண்டும். ஒப்புக்கொள்கிறாய் அல்லவா ?

ராஜா: கிரேக்க இலக்கிய ஆதாரத்தில் எழுந்த ஐரோப் பிய இலக்கியங்கள் பூராவுக்கும் வாரிசாகத் தோன் றியதுதான் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி. பதினெட் டாம் நூற்றாண்டில் பெஷியும், பத்தொன்பதாம் நூற் றாண்டில் வேதநாயகம் பிள்ளையும் தங்கள் ஆங்கில அறிவு அடிப்படையில்தான் தமிழில் பல இலக்கியங் களைக் சிருஷ்டிக்க முற்பட்டார்கள் என்பது வெளிப் படை.

மணி: ஐரோப்பாவுக்கு இந்திய இலக்கியம் தெரிய வந்ததும் இந்த இரண்டு நூற்றாண்டுகளில்தானே ?

ராஜா: ஆமாம். சிறப்பாக சம்ஸ்கிருத இலக்கியத்தையும் சீனத்து இலக்கியத்தையும் ஐரோப்பியர்கள் அறிந்து கொண்டது இந்த இரண்டு நூற்றாண்டுகளில்தான். ஐரோப்பிய இலக்கியத்தின் உருவங்களை மாற்றி விடக்கூடிய அளவுக்கு ஆசிய இலக்கியங்கள் ஐரோப்பிய இலக்கியங்களை இன்று பாதித்துள்ளன.

மணி: இது கொடுத்து வாங்கும் காரியம் என்று சொல்லுகிறாய் ?

ராஜா: அதுமட்டுமல்ல. காலப்பெருக்கில் முடிவுமற்றது என்று சொல்லுகிறேன். தமிழ்க் கம்பராமாயண அறிவு ஐரோப்பாவுக்கு எட்டும் காலம் வரும் என்கிறேன்.

மணி: வரத்தானே வேண்டும். ஆனால் அந்தக் காலம் வருமுன் நாம் நமது வீட்டைச் சீர்செய்து சரிப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

ராஜா: கம்ப ராமாயணம் காவியம், அதற்கீடாகச் சொல்லக்கூடிய காவியங்கள் உலகிலேயே இரண்டு மூன்றுதான் இருக்கக்கூடும் இல்லையா ?

மணி: ஏன் இரண்டு மூன்று? நூறு இருநூறு காவியங்கள் இல்லையோ?

ராஜா: காவியங்கள் மண்ணையும் மொழியையும் பொறுத்தவை. ஆதிகவி என்று சம்ஸ்கிருதத்தில் பெயர் பெற்ற வால்மீகியையும், ஆதிகவி என்று கிரேக்கத்தில் புகழ்பெற்ற ஹோமரையும், மத்தியகால இத்தாலியக் கவியான டாண்டேயையும் பிரமாதமான காவிய கர்த்தாக்களாக உலகம் அங்கீகரிக்கிறது.

மணி: நானூறு மொழிகளில் நாலே காவியங்கள் தானு?

ராஜா: நானூறு மொழிகளில் நாலாயிரம் காவியங்கள் பெயரளவில் இருக்கத்தான் இருக்கின்றன. அக் காலத்திய முக்கோண எழுத்துக்களில் கற்களில் பொறிக்கப்பட்ட கில்கா்மெஷ் கதைதான் இன்று மனிதனுக்குத் தெரிந்த முதல் காவியம். ஆனுல் இலக்கிய பூர்வமாக காவியம் பூத்தது இந்த நாலு பெரிய கவிகளிடம்தான் என்று சொல்வது பொருந் தும் என்று தோன்றுகிறது—வால்மீகி, ஹோமர், கம்பன், டாண்டே. மற்ற காவிய கர்த்தாக்களை இரண் டாந்தரமான காவியங்கள் செய்தவர்களாகச் சொல்ல லாமே தவிர, முதல்தரம் என்று சொல்ல முடியாது.

மணி: நீ சொல்வது புரிகிறது. ஆனுல் இதை நிர்ணயிக்கிற அளவுகோல் என்ன?

ராஜா: அந்த அளவு கோலைத் தீர்மானித்துவிட முடியு மானுல் இலக்கிய விசாரம் முடிவுற்றுவிடும்.

மணி: அளவுகோலை அப்படி நிரந்தரமாக நிர்ணயித்து விட முடியாது என்கிருய், இல்லையா?

ராஜா: எந்த அளவு கோலுக்கும் அப்பாற்பட்டதாக இருப்பதுதான் உயர் இலக்கியம்—அதுதான் இலக்கியத்தின் அடிப்படையான அளவுகோல்.

மணி: முதல்தரம், இரண்டாந்தரம் என்று சொல்லி விட்டு அளவுகோல் இல்லை என்ருல் என்ன அர்த்தம்?

ராஜா: இந்த அர்த்தத்தைக் கண்டுபிடிக்க முயல்வ திலே நாம் இலக்கியத்தின் நோக்கத்தையே கண்டு விடலாம்.

மணி: இலக்கியத்தின் நோக்கத்தைக் கண்டுவிட்டால் இலக்கிய விசாரத்தின் நோக்கத்தையும் கண்டு விட லாம்தான். ஆனால் இன்னும் சற்று விரிவாகச் சொல்லு, அளவு கோல்களைப்பற்றி.

ராஜா: இலக்கியத்தை அணுகுபவன் எவனும் தனது சொந்த ரஸ அநுபவத்தை வைத்துத் தனது அளவு கோல்களை நிர்ணயித்துக் கொள்கிறான்.

மணி: அதாவது படித்தது ஒன்று நன்றாயிருக்கிறது என்று கண்டு, அதேபோலப் படிப்பதற்கு இருப்ப தெல்லாம் நல்லது என்று அளவிடுகிறோம் என் கிறாயா?

ராஜா: இல்லை. ஒன்றைப்போல ஒன்றில்லை. ஆனா லும்........

மணி: ஆனாலும்........

ராஜா: இதிலும் உண்மை தொனிக்கிறது—அழகு உருவ மெடுத்து இருக்கிறது—நிமிஷம் நித்தியத்துவம் பெற்றிருக்கிறது—பூரணத்வம் எல்லைக்குள் அடங்கி யிருக்கிறது என்று கண்டு நமது அளவுகோலை அதற் கேற்ப அமைத்துக்கொள்ள முயலுகிறோம்.

மணி: அப்படி, இப்படி என்று சொந்த அனுபவம் காரணமாக அளவுகோல் உருப்பெறுகிறது. இல் லையா?

ராஜா: அளவுகோல் முக்கியமில்லை. அநுபவம், கலை, பூரணத்துவம்தான் முக்கியம்.

மணி: முன் சொன்ன நான்கு மகா கவிகளைப் படிப்ப தில் தான் பூரணத்துவம் தெரிகிறது. மற்ற யாரைப் படிப்பதிலும் மற்றவர்களிடம் இல்லை என்கிறாயா?

ராஜா : இந்த நால்வரிடமுமே எல்லோராலும் பூர்ணத் துவத்தைக் கண்டுவிட முடியுமா என்பது சந்தேகம் தான்.

மணி : அதாவது....?

ராஜா : அதாவது ஒருவருக்குக் கம்பன் பிடிக்கிற அளவு ஹோமர் பிடிக்காது. ஹோமர் பிடிக்கிற அளவு டாண்டே பிடிக்காதிருக்கலாம்.

மணி : பின்னே இவர்களையும் ஒரே தரம் என்று எப்படிச் சொல்லுவது?

ராஜா : ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் சொல்ல முடியாதுதான். ஆனல் இந்த நாலு காவிய கர்த்தாக்களையும் பற்றிக் காலமும் ஜனங்களும் அழுத்தமாகவே அபிப்பிராயம் சொல்லி வந்திருக் கிருர்கள்.

மணி : இலக்கியத்திலும் ஜனநாயகமா?

ராஜா : வோட்டெடுத்து நிச்சயம் பண்ணிய விஷயம் அல்ல இது. காலமும் இலக்கிய விசாரமும் முடிவு செய்த விஷயம்.

மணி : இலக்கிய விசாரத்தின் அவசியம் இதில்தான் இருக்கிறது என்பாயா நீ?

ராஜா : ஓரளவுக்கு அதுதான் உண்மை. இலக்கிய கர்த்தாவைப் பற்றிய வரையில் தன் எழுத்துக்கும் வாசகனுக்கும் பற்றிய சம்பந்தம் பற்றிக் கவலேயே கிடையாது. ஆனல் இலக்கிய விசாரம் இந்த வாசக—கர்த்தா சம்பந்தத்தைத் தெளிவு படுத்தி அழுத்தம் தருகிறது.

மணி: முதல்தர காவிய கர்த்தாக்களை விட்டு நகர எனக்கிஷ்டமில்லை என்றாலும், நானும் நகருகிறேன். நீ சொல்வது ஒரு புது விஷயமாக இருக்கிறதே. சொல்லு. என்னால் புரிந்துகொள்ள முடிகிறதா என்று பார்க்கிறேன்.

ராஜா: சாதாரணமாக வால்மீகி ராமன் என்று ஒரு லக்ஷ்ய புருஷனைச் சிருஷ்டித்துத் தரமுயன்றார் என்று எல்லோரும் சொல்லி ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அது ஓரளவுக்குத்தான் உண்மை என்று சொல்லமுடியும். லக்ஷ்யத்தையோ புருஷர்களையோ பற்றி மாமுனிவராகிய வால்மீகிக்கு என்ன கவலை? அவருக்குப் பாடத் தோன்றிற்று—பாடினார். உள்ளே இருந்த சக்தி ஒரு காவியத்தையே உருவாக்கியது. ராமனைக் குற்றங்குறைகளுடன்தான் வால்மீகியே கண்டார்.

மணி: ராமனை லக்ஷ்ய புருஷனாக்கியதற்கு வாசக பரம்பரைதான் காரணம் என்கிறாய் நீ?

ராஜா: வாசக பரம்பரை அப்படி ஒன்றும் ஒருமித்த மனத்துடன் ஒன்றும் செய்துவிட வில்லை. சமூக நியதிகளால், ஒரு குறிப்பிட்ட சமூகக் கோளாறினால், ராமன் லக்ஷ்ய புருஷனாகவும் ஆகிவிட்டான்—வைஷ்ணவர்கள் கையில் அவன் அவதார புருஷனானது மாதிரி.

மணி: அது போகட்டும். கவியையும் அவர் வாசகர்களையும் பற்றிச் சொல்ல வந்ததைச் சொல்லு.

ராஜா: காவிய சிருஷ்டி காலத்திலே கவிக்குத் தன் வாசகர்களைப் பற்றியே நினைவு கிடையாது. தானும் தன் காவியமுமாக அவன் தனித்து நின்றியங்கு

கிறான். யார் வாசிப்பார்கள், எப்படி வாசிப்பார்கள், அதிலிருந்து என்ன பாடங் கற்றுக்கொள்ளுவார்கள் என்றெல்லாம் அவன் கவலைப்படுவதே யில்லை. உள்ளத்திலுள்ள ஒரு தூண்டுதல் இயக்க அவன் கவிதை செய்கிறான். அது பல்லாயிரக் கணக்கான வாசகர்களைப் பாதித்தால்அதற்கு அவன் பொறுப்பே யல்ல என்றுதான் சொல்லவேண்டும்.

மணி: நீ சொல்வதை ஒப்புக்கொண்டால், கலைஞனுக்குப் பொறுப்பே யில்லை என்று அன்றோ ஏற்பட்டுவிடும்?

ராஜா: ஒருவிதத்தில் பொறுப்பில்லைதான். ஒருவிதத்தில் மிகவும் பிரமாதமான பொறுப்பு அவனுடையது என்றுதான் சொல்லவேண்டும். தன் கலைக்கும், விஷயத்துக்கும், அவ்விஷயத்து உருவத்துக்கும், உண்மைக்கும் கலைஞன் ஏற்றுக் கொள்கிற பொறுப்பு மகத்தானதல்லவா? அந்தப் பொறுப்பை ஏற்றுத்தான் அவன் தன் காவியத்தைச் சிருஷ்டிக்கிறான்.

மணி: இந்தப் பொறுப்பை நிர்ணயிப்பது யார்?

ராஜா: கலைஞனின் பொறுப்பை நிர்ணயிப்பது அவனேதான். வேறு யார் அவனைக் கட்டுப்படுத்த முடியும்? தானாக ஏற்ற பொறுப்பைத் தானே நிறைவேற்ற வேண்டிய கட்டாயம் ஒன்றுதான் அவனுக்குண்டு.

மணி: நீ சொல்வது காவியகர்த்தா என்கிற பெரியவனுக்கு மட்டும் தானா—மற்ற எல்லா இலக்கியாசிரியர்களுக்குமே பொருந்துமா?

ராஜா: எல்லோருக்குமே பொருந்தும்தான். ஆதி காவியத்தை எழுதிய வால்மீகிக்கும், இன்றைய

'சாப விமோசன'த்தை எழுதிய புதுமைப்பித்தனுக்கும் இலக்கிய விசாரம் சம்பந்தப்பட்ட மட்டில் வித்தியாசமே கிடையாது. ஜனநாயகம் என்ருயே—அது இலக்கியத்தில் கொடுங்கோலாட்சி செலுத்துகிறது என்ருல் பொருந்தும்.

மணி : வால்மீகிக்குப் பத்திரிகைத் தேவைகள் இல்லை. புதுமைப்பித்தனுக்கு இருந்தது. கிரேக்க நாடகாசிரியர்களுக்கு என்ன நிர்ப்பந்தங்கள் இருந்தன என்பது நமக்குத் தெரியாது—ஆனல், ஷேக்ஸ்பியருக்கோ எனில் எலிஸபெத் ராணி காலத்துத் தரை மகா ஜனங்களின் நிர்ப்பந்தம் இருந்தது. ஷேக்ஸ்பியர் நாடகங்களில் இந்த நிர்ப்பந்தம் தொனிக்கிறது பல இடங்களில் என்பது உண்மைதானே?

ராஜா : இந்த நிர்ப்பந்தத்தை யெல்லாம் மீறி இலக்கியம் எழுந்தது—பத்திரிகையின் நீளக் கொடுங்கோல், தரைமகாஜனங்களின் ரஸக்குறைவுக் கொடுங்கோல் எல்லாவற்றையும் மீறி இலக்கியம் எழுந்தது என்பதுதான் விசேஷம். அந்த மாதிரித் தாற்காலிக நிர்ப்பந்தங்களை மீறி எழுதுகிறவர்களை, நிர்ப்பந்தங்களுக்குட்பட்டும் மீறியவர்களைப் போல உள்ளவர்களையே நாம் முதல்தரமான கலைஞர்களாக மதிக்கிருேம்.

மணி : உண்மைதான். ஆனல் நிர்ப்பந்தம் காணக் கிடக்கிறது அல்லவா?

ராஜா : அதனலென்ன? தரைமகாஜனங்களின் ரஸக் குறைவையும், கேலிப்பிரியத்தையும் சவக்குழி தோண்டுபவர்களாகவும், ஒரு பொலோனியஸாகவும் மாற்று

கிற திறமை யுள்ளவன்தானே ஷேக்ஸ்பியர்! மற்றவர்கள் நிர்ப்பந்தங்களுக்குப் பணிந்து அமுங்கி விட்டார்கள். அவன் அவற்றை மீறிக் கவிதை சிருஷ்டித்தான்.

மணி: நிர்ப்பந்தங்களை ஏற்றுக்கொள்வது என்பது சில சமயங்களில் தவிர்க்க முடியாததாகி விடுகிறது. வாழ்க்கையிலே வசதி விரும்புகிறவன் அதிக நிர்ப் பந்தங்களை ஏற்றுப் பணிகிறுன்.

ராஜா: பணிய மறுப்பவன் வாழ்க்கையிலே வெற்றி பெருதவனுக இருக்கலாம், பணிய மறுக்காதவன் வெற்றி பெறலாம்தான். ஆனுல் இலக்கிய வெற்றி வேறு—வாழ்க்கை வெற்றி வேறு. 'புதுமைப் பித்த னுக்கு வாழ வகை தெரியவில்லை, ஏமாந்துவிட்டார், எழுதும் சக்திகளை ஏராளமாக வைத்துக்கொண்டு' என்று லக்ஷக்கணக்கான பிரதிகள் விற்கும் பத்திரி கையில் தொடர் கதைகள் எழுதும் ஒரு ஆசிரியர் அபிப்பிராயம் தெரிவித்ததில், அவர் அளவுகோல் படி தவறில்லை என்றுதான் சொல்லவேண்டும். அதற்காக அவர் புதுமைப் பித்தனைவிட நன்ருகக் கதைகள் எழுதி யிருக்கிருர் என்று சொல்ல முடியுமா?

மணி: எழுதினுலோ?

ராஜா: எழுதினுல் சொல்லலாம்தான். எழுதவில்லை என்பதுதானே விஷயம். எழுதவும் மாட்டார் என்றும் அநுமானிக்கலாம் நாம். ஏனென்ருல் அவர் இலக்கிய சுபாவத்தையே திருப்பி, ஜனங் களுக்கு எது பிடிக்கும் என்று தீர்மானித்து எழுது பவர். புதுமைப்பித்தன் தனக்குப் பிடித்தது இது,

யார் ஏற்றுக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் சரிதான் என்று எண்ணி எழுதியவன். அந்த வித்தியாசம் உண்டுதானே?

மணி: பத்திரிகை யுகத்தில் வாசகர்களுக்கு இது பிடிக்கும் இது பிடிக்காது என்று எண்ணித் தயங்குவது நியாயம் தானே?

ராஜா: நியாயம்தான். ஆனால் பத்திரிகை எழுத்தெல்லாம் இலக்கியம் என்று எண்ணுவதுதான் சரியில்லை.

மணி: நமது இலக்கிய விசாரம் நம்மைக் காவியங்களைப் பற்றிய பேச்சிலிருந்து பத்திரிகை எழுத்து வரையில் கால் மணியில் கொண்டுவந்து விட்டுவிட்டதே - அதுவும் ஆச்சரியம்தான், இல்லையா?

ராஜா: அதில் ஆச்சரியப்பட எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஏனென்றால் இன்று பத்திரிகைகள்தான் நம்மில் பெரும்பாலோர் அறிந்த இலக்கியமாக இருக்கிறது.

மணி: புலர் இலக்கியம் என்று வேறு ஒன்றையுமே படிப்பதில்லை என்பது உண்மைதான்.

ராஜா: இந்தக் காலத்தில் பத்திரிகை எழுத்தைப் புறக்கணிப்பதற்கில்லைதான். விஷ்ணுவின் பத்தாவது அவதாரமான கல்கி பத்திரிகை புருஷனாக அவதரித்தாலும் அவதரிப்பான் என்று நாம் சொல்வது பிசகில்லை. கலி முற்ற முற்ற இலக்கிய தர்மத்திலும் பத்திரிகைத் தன்மை அதிகரித்துக் கொண்டு தான் இருக்கிறது.

மணி: ஆகவேதான் கல்கியை நாம் இன்றைய தமிழ் இலக்கியாசிரியர்களில் பெரியவராகக் கொண்டாடுகிறோம் என்கிறாயா நீ?

ராஜா: நாம் என்று சொல்லாதே. நம்மில் பலர் என்று சொல். கல்கியின் எழுத்திலே இலக்கிய தர்மத்தை விடப் பத்திரிகை தர்மம் அதிகம் என்பதுதான் என் அபிப்பிராயம்.

மணி: தமிழில் எழுதப்படுவதை வாசிக்க நமக்கு அதிகப்படியான வாசகர்கள் ஏற்படுத்தித் தந்தார் கல்கி என்று சொல்வது பொருந்துமே. அது மிகவும் முக்கியமான சேவை அல்லவா?

ராஜா: பத்திரிகை தர்மத்தைக் காப்பதும் அப்படி யொன்றும் மட்டமான சேவை யல்லதான். ஆனால் இன்று தமிழில் எழுதுகிறவர்களுக்கு வாசகர்களை உண்டாக்கித் தந்தவர் என்று கல்கியை மட்டுமல்ல—அதற்கு முன் வந்த பலரையும் நாம் போற்ற வேண்டும் - திரு. பொன்னுசாமிப் பிள்ளை, ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஜே. ஆர். ரங்கராஜு முதலியவர்களை இந்த வரிசையில் சிறப்பாகச் சொல்லவேண்டும்.

மணி: இவர்கள் எல்லோருமே நாவலாசிரியர்கள் தான் அல்லவா?

ராஜா: ஆமாம். அதுவும் ஆங்கில இரண்டாந்தர நாவலாசிரியர்களை நம்பித் தழுவித் தமிழில் நாவல் எழுதியவர்கள். இவர்கள் தந்த வேகம் காரணமாகத்தான் தமிழில் நாவல் பல வருஷங்கள் வெறும் பொழுது போக்காகவே இருந்து வந்துவிட்டது என்று சொல்லவேண்டும்.

மணி: பிற மொழி இலக்கியங்களில் நாவல் துறை பொழுது போக்குக்காக மட்டுமின்றிப் பயனுள்ள தாகவும் இருக்கிறது என்கிறாயா நீ?

ராஜா: பொழுது போக்கு, பயனுள்ளது என்பதல்ல விஷயம். இலக்கியமே ஒரு விஷயத்தில் பொழுது போக்குத்தான் - பயனுள்ளதும் தான். பொழுது போக்கத் தோன்றியது மட்டுமல்ல இலக்கியம் - பயன் தருவது மட்டுமல்ல இலக்கியம். இரண்டையும் மீறிய ஒரு காரியத்தை இலக்கியம் செய்கிறது. அதேபோல இலக்கியத்துறைகளில் ஒன்ருன நாவலும் செய்கிறது.

மணி: பொழுதுபோக்கு, பயனுள்ளது இரண்டுமாக எப்படி ஒரே சமயத்தில் இருக்கமுடியும் ஒரு நூல்?

ராஜா: அதுதானே இலக்கியக் கெருடி வித்தை! வார்த்தையளவில் விவாதம் செய்யலாம் - ஒரு நூல் மக்களுக்குப் பயன் தரவேண்டும் என்றும், பயன் தர வேண்டியதில்லே, பொழுது போக்காகப் பயன் படலாம் என்றும். ராமாயணம் பொழுது போக்கா. பயனுள்ளதா? ஷேக்ஸ்பியர் பொழுது போக்கா, பயனுள்ளதா? இரண்டும்தான் என்கிற பதில்தான் சரியானது. மனிதன் நல்லவனுமல்ல, கெட்டவனுமல்ல - அவன் மனிதன் என்பது போலவேதான் இது.

மணி: நான் எத்தனேயோ படிக்கிறேன் - அவற்றின் பயன் உடனேயோ, பின்னரோ தெரிவதில்லேதான். ஆனல் நான் பொழுதுபோக்கு இலக்கியத்தில் நம்பிக்கையற்றவன். ஆகவே நீ சொல்வது புரிகிறது. ஆனல் நாவல்களேப் பற்றி யன்ரே சொல்ல வந்தாய். சொல்லு.

ராஜா: ஒரு காலத்தில் இலக்கியப் பரப்பிலே காவியங்கள் வகித்து வந்த ஸ்தானத்தை இன்று நாவல்கள் வகிக்கின்றன.

மணி: ஒரு விதத்தில் நீ சொல்வது தவறு. ஒரு காலத்திலும் இன்று நாவல்கள் எழுதப்படுவது போல அத்தனை காவியங்கள் எழுதப்பட்டதில்லை என்றுதான் தோன்றுகிறது.

ராஜா: கணக்கு எண்ணிப் பார்க்கவேண்டிய அவசியமில்லை. ஆனால் மனித ரஸனையிலே நாவல் இலக்கியம் அசைக்க முடியாத இடம் பெற்றுவிட்டது. ரகரகமான நாவல்கள், எத்தனை எத்தனையோ விதமான மனிதர்களை நமக்கு அறிமுகம் செய்து வைக்கின்றன.

மணி: இதிலும் தராதரம் சொல்ல வேண்டாமா? எல்லா நாவல்களுமே ஒரே தரம் தானா? எழுதப்படுகிற நாவல்கள் எல்லாவற்றையுமே படித்து விடுவது என்பது ஒரு ஆயுள் காலத்தில் முடிகிற சமாசாரமா?

ராஜா: ஐரோப்பாவின் முதல் நாவல் என்று செர்வாண்டிஸ் என்கிற இஸ்பானிய மேதை எழுதிய டான் க்விக்ஜோட்டைச் சொல்வது வழக்கம். அது பதினாறும் நூற்றாண்டில் தோன்றியது. அது அந்தக் காலத்தில் வழக்கிலிருந்த அசட்டு நாவல்களைக் கேலி செய்வதற்காக எழுந்த கடைசி நவீனம்.

மணி: அது ஐரோப்பாவின் முதல் நாவலாகி விட்டதா? நல்லது.

ராஜா: அன்று முதல் இன்று வரை எழுதியுள்ள நாவலாசிரியர்களிலே சிறந்தவர்கள் என்று இரண்டு

ருஷ்ய மேதைகளைச் சொல்லவேண்டும். டாஸ்டாவ்ஸ்கியையும், டால்ஸ்டாயையும்தான் சொல்லுகிறேன். டால்ஸ்டாவ்ஸ்கி எழுதிய நாவல்களில் பலவும் சிறந்தவை. டால்ஸ்டாயின் போரும் அமைதியும் நாவல் இலக்கியத்திலே ஒரு தனிப்பெரும் சிகரம். அவர்களுக்கீடான நாவலாசிரியர்கள் உலகில் வேறு எந்த மொழியிலும் இன்னும் தோன்றவில்லை என்று சொல்லலாம். ஸெல்மா லாகர்லெவ் எழுதிய கெஸ்டாபெர்லிங் ஸாகா என்கிற ஸ்வீடிஷ் பாஷை நாவலையும், ஹெர்மன் மெல்வில் எழுதிய மோபி டிக் என்கிற ஆங்கில நாவலையும் சேர்த்து இந்த நாலு நாவலாசியர்களும் நாலு மிகச் சிறந்த காவிய கர்த்தாக்களுக்கு ஈடானவர்கள் என்று நான் சொல்வேன்.

மணி : இதெல்லாம் சொந்த அபிப்பிராயம்தான்—இல்லையா ?

ராஜா : இலக்கிய விசாரத்திலே உண்மையான சொந்த அபிப்பிராயங்களுக்கு மட்டுமே இடமுண்டு. மற்ற அபிப்பிராயங்களுக்கு இடமே கிடையாது.

மணி : சரி. சொல்லு, நாவல்களைப் பற்றி.

ராஜா : பால்ஸாக், டிக்கன்ஸ் போன்ற ஆசிரியர்கள் தங்கள் நாவல்கள் மூலம் நமக்கு இந்த உலகத்தைப் போலப் பரந்து விரிந்த வேறு ஒரு பிரபஞ்சத்தையே சிருஷ்டித்துத் தந்திருக்கிறார்கள். பால்ஸாக்கின் உலகம் பொருளாதாரம் என்கிற அந்த நாளையைப் புது சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. டிக்கன்ஸ் என்கிற ஆங்கில நாவலாசிரியரின் உலகம்

சற்றே விரிசல் விழுந்த கண்ணுடி மூலம் உலகத்தைப் பார்க்கிற தோற்றத்தைத் தருகிறது நமக்கு.

மணி: விரிசல் விழுந்த என்று சொல்லுவதைவிட ஜவுளிக்கடை வாசலில் அந்த நாளில் வைத்திருப் பார்களே கோமாளிக் கண்ணுடிகள், வளைந்து, பார்ப் பவரைப் பெரியவர்களாகவும், சிறியவர்களாகவும் காட்டுகிற கண்ணுடி மாதிரி இருக்கிறது டிக்கன் ஸின் கலை என்று சொல்லுவது பொருந்தும் இல் லையா?

ராஜா: பொருந்தும், பொருந்தும். இந்த மிகைப் படுத்தியும் குறைத்தும் கூறுகிற காரியத்திலே டிக் கன்ஸுக்கு ஈடு ஜோடு வேறு யாரும் இல்லை என்றே சொல்ல வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய கலையிலே ஒரு சீர்திருத்த நோக்கம் பரவிக் கிடக்கிறது. இந்தச் சீர்திருத்த நோக்கம்தான் டிக்கன்ஸின் கலையை விக்டோரியா காலத்திய ஆங்கிலேயருக்கு மிகவும் உகந்ததாகச் செய்தது என்று சொல்லவேண்டும்.

மணி: டிக்கன்ஸ், பால்ஸாக் போன்றவர்கள் வேறு மொழி இலக்கியங்களில் தோன்றவில்லையா?

ராஜா: அந்த அளவில் தோன்றவில்லை என்று சொல்லலாம். இவர்களுக்கு ஈடு இவர்களே தான். ஆனுல் தமிழில் நாவல்கள் தோன்றி அதிக வருஷங் கள் ஆகிவிடவில்லை என்ருலும்கூட, நமக்குங்கூட ஒரு டிக்கன்ஸ் கிடைக்காமல் போய்விடவில்லை.

மணி: யாரைச் சொல்லுகிருய் நீ?

ராஜா: எஸ். வி. வி. யைச் சொல்லுகிறேன். அவர் ஆரம்ப எழுத்துக்களில் நாம் ஹாஸ்ய எழுத்தாள

ராகப் பார்த்தோம். ஆனால் பிற்காலத்தில் அவர் எழுதிய பல நூல்களில் கனமான பல விஷயங்களைச் சீர்திருத்தம், கிண்டல், கேலி என்கிற நோக்கங் களுடன் கையாண்டிருக்கிறார். பலவிதமான குண சித்திரங்களை மிகைப்படுத்தியும் குறைத்துக் கூறியும் சிருஷ்டித்திருக்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தனது பழமை நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு அவர் ஆழ்ந்த இலக்கிய சிருஷ்டி செய்திருக்கிறார்.

மணி: The novel is a mirror walking down the lane என்று சொல்கிற விஷயம் எஸ். வி. வி. விஷ யத்தில் பொருந்தும் என்பது எனக்கும் தெரிகிறது.

ராஜா: அந்தக் கண்ணாடி எஸ். வி. வி. என்கிற பண்பு பெற்றிருந்தது—வெறும் கண்ணாடியாக இல்லை என் பதுதான் சிறப்பான விஷயம். அந்தக் கண்ணாடி மூலம் பார்த்து, நாம் ஏற்கெனவே அறிந்த உல கத்தை மீண்டும், சற்றே வித்தியாசப்பட்ட வகையில் அறிந்து கொள்ளுகிறோம்.

மணி: ராமமூர்த்தி, கோபாலன் ஐ. சி. எஸ்., உல்லாஸ வேளை, ராஜாமணி முதலிய எஸ். வி. வி. நாவல்கள் படித்து எத்தனையோ நாட்களாயின. எனினும் இன்னும் அவற்றில் பல விஷயங்கள் எனது மனசி லும்கூடப் பசுமையாகவேதான் இருக்கின்றன.

ராஜா: இப்படிப் பசுமையாக ஞாபகம் இருப்பதையே நல்ல இலக்கியத்தின் ஒரு தன்மை என்று சொல்ல லாம் இல்லையா?

மணி: சொல்லத்தான் வேண்டும். ஒரு தரம் படித் தாலுமே நமது வாழ்க்கைக் கண்ணோட்டத்தை

ஆழமடையச் செய்து சிறப்படையச் செய்வதுதான் நல்ல எழுத்து என்று சொல்லலாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ராஜா: உண்மை. பார்த்துக்கொண்டே யிருப்பதைப் பழைய கண்ணோட்டத்துடன் பார்க்காமல் புதுக் கண்ணோட்டத்துடன் பார்க்க நமக்கு வழி வகுத்துத் தருவதெல்லாவற்றையும் நாம் நல்ல இலக்கியம் என்று ஆதரிக்கத்தான் வேண்டும். பெரிய அளவில் நல்ல இலக்கியம் செய்தவர்கள் என்று நாம் யாரைச் சொல்லுகிறோம் என்றால், ஒரு புதுக் கண்ணோட்டத்தை மட்டுமல்ல, ஒன்பதையும், ஆயிரத்தையும், நமக்கு ஏற்படுத்தித் தருகிறவர்களைத்தான் சொல்ல வேண்டும்.

மணி: ஷேக்ஸ்பியர், ஹோமர், கம்பன் இவர்களிடமும் டாஸ்டாவ்ஸ்கி, டால்ஸ்டாய், நீ சொன்னாயே ஸெல்மா லாகர்லெவ், ஹெர்மன் மெல்வில் இவர்களையும் படிக்கும்போது, தானாகவே வாசகனுக்கு ஆயிரக் கணக்கான கண்ணோட்டங்கள், பார்வைக் கோணங்கள் ஏற்படுவது உண்மைதான்.

ராஜா: பால்ஸாக், டிக்கன்ஸ் முதலியவர்களைப் படிக்கும்போது ஆயிரக்கணக்கான பார்வைகள் ஏற்படுவதில்லை—நூற்றுக் கணக்கில்தான் ஏற்படுகின்றன என்று சொல்ல வேண்டும். ஆனால் இந்தக் கண்ணோட்டம் கணக்கேயில்லாமல் ஒரே கண்ணோட்டத்தைப் பூர்த்தியாகச் செய்த நல்ல நாவலாசிரியர்களும் உண்டுதான்.

மணி: உதாரணமாக ப்ளோபேரைச் சொல்லலாமா?

ராஜா: அவனைப் பற்றித்தான் நானும் சொல்ல வந்தேன். ஒரே கண்ணேட்டத்தை, ஒரே கோணத்தில் நின்று, ஒரு வார்த்தைகூட அசைக்க முடியாமல், அழிக்க முடியாமல் செய்து காட்டியவன் அவன். ஒரு மிகச் சிறப்பான எழுத்துக் கலையிலே அவன் வல்லவன். அந்தச் சிறப்புக் கலைக்கு அடி எடுத்துக் கொடுத்தவன் ஸ்டெந்தால். ஸ்டெந்தாலும் ப்ளோபேரும் மேலைநாட்டு நாவல் கலையில் தனிரகம். அவர்கள் கலைஞர்களாகப் பூரண வெற்றி கண்டவர்களோ இல்லையோ, கலை உத்திகளை ஆழச் செய்து விஸ்தரித்து, நாவல் கலை வளர உதவியவர்கள் என்று அவர்களைப் போற்றவேண்டும்.

மணி: இப்படிப்பட்ட உத்தி வல்லுநர்கள் வேறு மொழியிலும் உண்டு இல்லையா ?

ராஜா: உண்டுதான். ஆங்கிலத்தில் லாரன்ஸ் ஸ்டெர்ண் என்பவரைச் சிறப்பான உதாரணமாகச் சொல்லலாம். அவர் எழுதிய டிரிஸ்டிராம் ஷாண்டி என்கிற நாவல் நாவலாக வெற்றி பெற்றதா இல்லையா என்பது சந்தேகமே. ஆனல் அது ஒரு பரிசோதனை நாவலாக எழுதிவிட்ட இருநூறு வருஷங்களுக்குப் பிறகும் சுவையாக இருக்கிறது. அந்த அளவில் இல்லாவிட்டாலும் சிறிய அளவில் பரிசோதனைகள் பலவற்றைப் பலர் நடத்தியிருக்கிருர்கள்.

மணி: இன்றும் ஆங்கில இலக்கியத்தில் பரிசோதகர்களுக்குக் குறைவில்லையே?

ராஜா: இல்லைதான். ஜேம்ஸ் ஜாய்ஸ் நாவலாசிரியரா அல்லவா என்பதே சந்தேகம்தான். ஆனல் அவர் நடத்திய பரிசோதனைகள் நாவல் கலையின் எல்லைகளை

வெகுவாக நமக்கு விஸ்தரித்துத் தந்தன—நாவல் விஷயத்தை, அங்கீகரிக்கப்பட்ட ஒரு மனோதத்துவ அடிப்படையில் ஆழப்படுத்தித்தந்தன என்பதும் உண்மை. சிறப்பான பல நவீன கால நாவல்கள் எழுவதற்கு வழி செய்து தந்தவர் ஜேம்ஸ் ஜாய்ஸ்.

மணி: தற்காலத்து நாவல்களிலே சிறப்பானவையாக எதைச் சொல்ல முடியும். டால்ஸ்டாய், டாஸ் டாவ்ஸ்கி என்று சொல்லுகிற அளவில் பிற் காலத்திய எந்த நாவலாசிரியனையாவது சொல்ல முடியுமா?

ராஜா: ஓரிருவர் இல்லாமல் இல்லை. ஆனால் அவர்க ளுடைய முழு உருவத்தையும் காலம்தான் நமக்கு நிர்ணயித்துத் தர முடியும். இப்படிப்பட்டவர்களில் தாமஸ் மான் என்கிற ஜெர்மனியில் பிறந்து உல குக்கே சொந்தமானவராகச் சமீப காலம் வரையில் எழுதி உயிர் நீத்தவரைச் சொல்ல வேண்டும். அவர் நாவல் இலக்கியம் மஹோன்னதமானது என்பது என் அபிப்பிராயம். இதே அளவுக்கு எட்டுபவர், ஆனா லும் அதிகமாக எழுதாதவர் என்று பேர் லாகர்க் விஸ்டு என்கிற ஸ்வீடிஷ் நாவலாசிரியரைச் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறேன். இந்த அபிப்பிரா யங்களைக் காலம்தான் ஊர்ஜிதம் செய்யும்.

மணி: நான் தாமஸ் மானைப் படித்துப் பார்த்திருக் கிறேன். மிகவும் கடினமான ஆசிரியர். ஒரு பக்கம் படிப்பதற்குள் ஒன்பது தரம் கொட்டாவி வந்து விடும் என்பது என் அநுபவம்.

ராஜா: இலக்கியம் சுவையாக, சுவாரசியமாக இருக்க வேண்டும், சுலபமாகப் படிக்கும்படியாக இருக்க

வேண்டும் என்கிற நினைப்பெல்லாம் சமீப காலத்திய, பத்திரிகை யுகத்தைச் சேர்ந்த சிந்தனைகள். மெத்தை தைத்த நாற்காலியில் அரைத் தூக்கத் துக்கும் விழிப்புக்கும் இடையே சினிமாவையும் (நமக்கு இன்னும் பழக்கமாகாத டெலிவிஷனையும்) இலக்கியத்துக்குச் சமமாக மதிக்கிற தலைமுறையைச் சேர்ந்தவர்கள் அல்லவா நாம்?

மணி: இருந்தாலும் தாமஸ் மான் போன்ற படிக்கச் சிரமப்படுகிற, சிரமப்படுத்துகிற நாவலாசிரியர்களை நான் ஏன் படிக்க வேண்டும்? அதற்குப் பதில் சொல்லு நீ.

ராஜா: இலக்கியம் எல்லாமே கடினமானதுதான் என்பது ஒரு பதில். ஹோமரைப் படிப்பதும், ஷேக்ஸ்பியரைப் படிப்பதும் அத்தனை சுலபமான காரியமல்ல.

மணி: இருந்தாலும் தாமஸ் மான்....

ராஜா: இரு. முழுவதும் சொல்லிவிடுகிறேன். டால்ஸ்டாயின் போரும் அமைதியும் தன் நீளத்தாலேயே பலரைப் பயமுறுத்துகிறது என்றாலும் படிப்பது ஓரளவு சுலபம்தான். ஆனால் நாவலாசிரியர்களில் டாஸ்டாவ்ஸ்கியையும், காவியகர்த்தாக்களில் டாண்டேயையும் படிப்பது மிகவும் சிரமமான காரியம் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். வாழைப்பழத்தை உரித்துத்தான் தின்றாக வேண்டும். தேங்காயை மட்டை உரித்து உடைத்துத்தான் தின்றாக வேண்டும். அநுபவிப்பதற்குச் சிரமப்பட்டேனும் பயிற்சி செய்துகொள்வதுதான் அவசியம். தாமஸ் மானைப் படிக்க விரும்புகிறவன் சிரமப்பட்டுப்

படிக்கத் தயாராக இருக்கத்தான் வேண்டும். டாஸ் டாவ்ஸ்கியையும் டாண்டேயையும்விடத் தாமஸ் மான் சிரமமான இலக்கியாசிரியர் என்று சொல்ல முடியாது.

மணி: சரி; தாமஸ் மானைப்பற்றி இவ்வளவு போதும்— இன்னொரு தரம் Magic Mountain-ஐப் படிக்க முயன்றுவிட்டுச் சொல்லுகிறேன். ஆனால் படித்து முடிப்பேன் என்கிற நம்பிக்கை எனக்கில்லை.

ராஜா: Joseph and His Brothers படித்துப் பார். தாமஸ் மானின் பெருமை தெரிய வராமற் போகாது. ஒவ்வொரு பக்கத்திலும் அவர் மேதை தவிர்க்க முடியாதபடி லேசாக வாசிப்பவனுக்குங்கூடத் தெரியும்.

மணி: பிரெஞ்சு மொழியிலே இலக்கியமெல்லாம் பிரமாதமாக வளர்ந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் நீ ஒரு ஜெர்மன் ஆசிரியரைச் சொல்கிறாயே தவிர, பிரெஞ்சு ஆசிரியன் எவனையும் சிறப்பாகச் சொல்லவில்லையே.

ராஜா: பிரெஞ்சு மொழி வளமானது. ஆனால் மொழி வளம் வேறு, இலக்கிய வளம் வேறு. ஆனால் பிரெஞ்சு மொழியிலே இலக்கிய வளம் இல்லை என்று சொல்ல முடியாது. ஒரு தலைமுறையில் எடுத்துக்கொண்டால் பிரெஞ்சு மொழியில் உள்ளது போல நல்ல ஒரு தரமான ஆசிரியர்கள் வேறு மொழியில் இருக்க மாட்டார்கள் என்பது உண்மை. ஓரளவுக்கு ஒவ்வொரு பிரெஞ்சு நாவலாசிரியனுமே ஒரு பரிசோதகன் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களுக்கு உருவத்திலும் நடையிலும் உள்ள

நம்பிக்கை ஆழத்திலே கிடையாது. அதனால்தான் பல நல்ல நாவலாசிரியர்கள் பிரான்சிலே உண்டு என்று சொன்னாலுங்கூட, மிகச் சிறந்தவர்கள் என்று சொல்ல ஒருவரும் இல்லை.

மணி: இதுவும் வெறும் அபிப்பிராயம்தான். இலக்கியத் துறையில் உருவம் நடை என்பதுதான் முக்கியம் என்று எண்ணுகிறவர்கள் இருக்கலாம் அல்லவா?

ராஜா: இருக்கிறார்கள். இல்லாமலென்ன? பிரெஞ்சு மொழி வளத்துக்குக் காரணமானவர்கள் இவர்கள் தானே? ஆனாலும் ஆழம் என்பது காணும்போது தான் எந்த இலக்கியத் துறையிலுமே கலை மனுஷ்யத்வம் பெறுகிறது. நடை, உருவம் இரண்டும் மொழி வளத்துக்குப் பெரிதும் உதவுகின்றன.

மணி: தமிழிலேகூட மொழி வளர்ச்சியை இலக்கிய வளம், வளர்ச்சி என்று கருதுகிறவர்கள் இல்லாமலில்லையே?

ராஜா: இல்லையா? அவர்கள்தான் அதிகம் என்று சொல்ல வேண்டும். மொழி வளம் தேவை. அதில்லாவிட்டால் இலக்கியத்தின் ஒரு அடிப்படை தகர்ந்துவிடுகிறது. என்ன சொன்னாலும் எழுத்து எனப்படுவது எல்லாமே மொழியை, வார்த்தைகளை அடிப்படையாகக் கொண்டு எழுப்பப்படுவது தானே! ஆனால் ஆழம், மனுஷ்யத்வம் என்பது இலக்கியத்தின் ஆதார அடிப்படை. அது காணப்படாத இடத்தில் இலக்கியம் எந்த அழகிய உருவம் பெற்றாலும் போதாது என்றுதான் சொல்ல வேண்டும்.

மணி: ஆழம் என்பது பரிபூரணமாக பிரெஞ்சு ஆசிரியர்களிடையே இல்லாது போய்விட்டது என்கிருயா?

ராஜா: அதுவுமில்லே. அநடோல் பிரான்ஸ், பிரான்ஸ்வா மேரியாக், ஆல்பெர் காமு போன்றவர்களிடம், ஆழமும் இல்லே என்று யாரும் சொல்லிவிட முடியாது. ஆனுல் அவர்கள் கருத்து, நோக்கம் நடையிலும் உருவத்திலும் செல்லுகிற அளவு ஆழத்தில் செல்வதில்லே என்றுதான் சொல்ல வேண்டும்.

மணி: பரிசோதனேகள் செய்ய பிரெஞ்சு நாவலாசிரியர்கள் தயாராக இருப்பதால்தான் நாவல்கலே பிரெஞ்சு மொழியில் மிகவும் முன்னேறி யிருப்பதாகச் சொல்கிருர்கள் என்கிருய் நீ.

ராஜா: ஆமாம். இலக்கிய வளம் சாத்தியமாவதே இலக்கிய பரிசோதனே அதிகம் இருப்பதனுல்தான். அந்த அளவுக்குத் தமிழ் நாவல் சரியான மரபிலே அடியெடுத்து வைத்துள்ளது என்பதில் சந்தேகமில்லே. வேதநாயகம் பிள்ளேயும், ராஜமையரும், மாதவையாவும் மூன்று விதமான பரிசோதனேகள் நடத்திப் பார்த்தார்கள். அதற்குப் பின்னர் பல வருஷங்கள் நாவல் எழுதுவதும் படிப்பதும் வெறும் பொழுது போக்காகவே கருதப்பட்டு வந்துவிட்டது. ஆனுல் 1940 வாக்கிலே மீண்டும் நாவல் கலே சிறப்பாகத் தலேயெடுத்தது. எஸ். வி. வியின் நாவல்கலே ஏற்கெனவே சொல்லிவிட்டேன். சங்கரராமின் மண்ணுசை ஒருவிதமான வெற்றி பெற்ற பரிசோதனே. ஆர். ஷண்முக சுந்தரம் எழுதிய நாகம்மாள் கிராமிய வாழ்க்கையை நாவலுக்கு

விஷயமாகக் கையாளுவதிலே வெற்றி கண்ட ஒரு பரிசோதனை. என் நாவல்கள் ஒவ்வொன்றையுமே நான் பரிசோதனையாகத்தான் நடத்திப் பார்த்திருக்கிறேன். ஒன்றைப் போல மற்ருென்று அமைந்து விடக் கூடாது என்கிற அடிப்படைக் கொள்கை எனக்குண்டு. அதேபோல ந. சிதம்பர சுப்பிரமணியத்தின் இதய நாதம் ஒரு நல்ல முயற்சி. வெற்றியையும் தோல்வியையும் சரிசமமாக அதிலே காணலாம். ஆனாலும் அது முக்கியமான முயற்சி—முயற்சி என்பதனால். அதேபோல இன்னும் புஸ்தகமாக வெளிவராத தி. ஜானகிராமனின் மோகமுள் கலைப் பேராசை தொனிக்கும் ஒரு முயற்சி. முற்றிலும் வெற்றி பெற்றதாகவும் சொல்ல முடியாது. பெற்ற வெற்றியிலும் பெரும் பகுதி ஆண் பெண் உறவு முறைகளைக் கிளர்த்தும் அளவிலே அமைகிறது. எனினும் உருவமும் நடையும் கருத்தாழமும், குணசித்திரமும் பொருந்தியிருக்கின்றன அதிலே என்று எனக்குத் தோன்றுகிறது.

மணி: இதே நாவலாசிரியர்களை நீ மறுபடி மறுபடி சொல்வதை நான் கவனித்திருக்கிறேன். மற்றவர்கள் எழுதுவது உன் கண்ணில் படவில்லையா?

ராஜா: படாமல் என்ன? படத்தான் படுகிறது. மற்றவர்கள் தானே இன்று சர்வஜன ரஞ்சகமான தமிழ் எழுத்தாளர்கள். அவர்கள் எழுத்துக் கண்ணில் படாமலும் ஒரு வாசகன் தப்பிவிட முடியுமா? யாரைப் பற்றி மனத்தில் வைத்துக்கொண்டு கேட்கிருய் சொல்லு?

மணி : கல்கி? அவர் பல சமூக சரித்திர நாவல்கள் எழுதியிருக்கிருரே? அவை படிக்கவும் இனிக்கின்றன என்றுதான் சொல்லவேண்டும். இல்லேயா?

ராஜா : கல்கியை நாவலாசிரியராக மதிப்பிடுவதில் இரண்டு விஷயங்கள் உண்டு. அவர் தழுவல் கோஷ்டியைச் சேர்ந்தவர். வடுவூரார், ஆரணி முதலியவர் பண்ணிய கைங்கரியத்தையே இன்னும் சற்றுத் தொடர்ந்து விடாப் பிடியாகப் பத்திரிகை யுகத்தின் வெற்றியுடன் செய்தார். அவரைப் படிக்க இனிப்பது என்னவோ உண்மை என்று தான் சொல்லவேண்டும். ஆனல் அவர் எழுதியதிலே அவருடையது எது, மற்றவருடையது—சிறப்பாக டூமாஸ், லியனர்டு மெர்ரக், லிட்டன் இவர்களுடையது எது என்று தீர்மானிப்பது சிரமமான விஷயம். இதுமட்டுமே போதும், அவரை serious ஆக நாவலாசிரியராகக் கவனிக்க வேண்டாம் என்று சொல்வதற்கு.

மணி : இரண்டாவது தகவலேயும் சொல்லு.

ராஜா : கல்கி தன்னுடைய நாவல்கள் எதிலுமே எந்த இடத்திலுமே நின்று இலக்கியக் கண்ணேட்டத்துடன் எழுதியதில்லே என்றுதான் சொல்லவேண்டும். நல்ல கலேஞன் தன் இலக்கியத்துக்கு விஷயமாக எடுத்துக் கையாளக் கூடிய விஷயங்களே யெல்லாம் ஒதுக்கிவிட்டு நகர்ந்து விடுகிருர் அவர். அவர் கதை சொல்வதெல்லாம் வாசகனுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது, சம்பவத்தின் உச்சநிலே எது, எங்கு கதைப் போக்கை அறுத்து வாசகனின் ஆவலேத் தூண்ட வேண்டும் என்கிற அடிப்படையில்தான்.

மணி: அதாவது அவரை நாவலாசிரியர் என்று சொல்வதைவிடத் தொடர் கதையாசிரியர் என்று சொல்வது பொருந்தும் என்கிருய்?

ராஜா: ஆமாம். தொடர்கதையும் நாவலும் வேறு வேறு உருவங்கள், துறைகள் என்பது வெளிப்படைதானே! தொடர்கதை பத்திரிகையுகத்தில், பத்திரிகை தருமத்தைப் பின் பற்றுகிற ஒரு இலக்கியத் துறை.

மணி: அதனுல்தான் கல்கியின் பாணி எல்லோருக்கும், பின் வந்த நாவலாசிரியர் பலர் உள்பட எல்லோருக்கும் உகந்ததாக இருக்கிறது என்கிருய்? காலத்துக்கேற்ப இருந்தது என்பதும் முக்கிய இலக்கிய அம்சம்தானே.

ராஜா: காலத்துக்கு உகந்ததாக இருப்பது மட்டும் போதாதே—எழுத்து இலக்கியமாக. காலத்துக்கு மட்டும் உகந்த எழுத்து பத்திரிகை எழுத்தாகவே நின்றுவிடும். காலத்தைக் கடக்கும் ஒரு தன்மையும் வேண்டும் எழுத்து இலக்கியமாவதற்கு.

மணி: அது தொடர்கதையில் சாத்தியமல்ல என்கிருய்.

ராஜா: வாசகனை மனசில் வைத்துக்கொண்டு எழுதுகிற எந்த எழுத்துக்கும் காலத்தை மீறி நிற்கும் சக்தி இல்லை என்பது இலக்கிய அநுபவம். சித்தாந்தம் அல்ல அது.

மணி: நான் பி. எம். கண்ணனின் நாவல்கள் சிலவற்றை வாசித்திருக்கிறேன். அவற்றின் அளவில் சரியாக வந்திருப்பதாகவே நினைத்தேன்.

ராஜா: உண்மைதான். கதாபாத்திரங்களை நமக்கு அறிமுகம் செய்து வைப்பதிலும், சூழ்நிலையை

வர்ணிப்பதிலும் கண்ணனைச் சிறப்பாகச் சொல்ல லாம். ஆனால் ஆழமோ, உத்திக் கையாளல்களோ போதாது. தவிரவும் நிறையவும் எழுதுவதால் ஒரு நாவல் மற்றொன்றைப் போலவே இருக்கிறது என்றும் சொல்ல வேண்டியதாக இருக்கிறது.

மணி: அது ஒரு பெரிய குற்றம் அல்லவே. ஜேன் ஆஸ்டனும், தாமஸ் ஹார்டியும் எழுதிய பல நாவல்கள் ஒன்றைப்போல ஒன்று இருக்கின்றன என்றுதானே சொல்ல வேண்டும் ?

ராஜா: அவர்களில் ஜேன் ஆஸ்டன் தன் காலத்திய மனித உள்ளங்களைச் சமூக நோக்குடன் படம் பிடித் துக் காட்டியவர். அதனால் ஆங்கில இலக்கியத்திலே அவருக்குத் தனிச் சிறப்பு. Don Quixote-டைப் போலவே ஜேன் ஆஸ்டனின் நாவலும் ஒரு பயங்கர நாவல் சகாப்தத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தது என்பது இரண்டாவது சிறப்பு. மூன்றாவ தாகச் சொல்ல வேண்டுமானால் அவள் அதிகமாக எழுதவில்லை என்றும் சொல்லலாம்.

மணி: ஹார்டி?

ராஜா ஹார்டிக்கு ஒரு வாழ்க்கைத் தத்துவம் பிடிபட் டிருந்தது. அதை வைத்து அவர் திரும்பத் திரும்ப நாவல் எழுதினார். ஆனால் பி. எம். கண்ணனில் அப்படி ஒரு தத்துவம் பொதிந்து கிடக்கவில்லை. சில்லறை விஷயங்களை மிகவும் பெரிதுபடுத்தி much ado about nothing என்கிற அளவுக்கு நானூறு பக்கங்களுக்குச் செய்துவிடுகிறார்.

மணி: இந்த விமரிசனம் அநுத்தமா போன்ற நாவ லாசிரியர்களுக்கும் பொருந்தும் இல்லையா?

ராஜா : பொருந்தும். ஆனல் அநுத்தமா விஷயத்தில் ஒரு உத்திப் பரிசோதனையும், சில விஷயங்களை ஊன்றிக் கவனித்து எடுத்துக்கொள்ளும் விதமும் அவர் நாவல்களைக் காப்பாற்றுகின்றன என்று சொல்லலாம்.

மணி: அதேபோல வேறு சில ஆசிரியர்களுடைய எழுத்தும் ஒரே மாதிரி யிருந்தாலுங்கூட, நாவல்களாகப் படிக்கும்படியாக இருக்கின்றன என்று சொல்லலாமா?

ராஜா: அப்படிச் சொல்லத் தமிழில் வேறு நாவலாசிரியர்கள் இருப்பதாகச் சொல்ல முடியாது. ஆனல் ஆர்வி, அகிலன் முதலியவர்களுடைய நாவல்கள் காதலை மையமாகக் கொண்டு எழுதப்படுகின்றன. காதல் என்பதே வாழ்விலும் உண்மை அடிப்படையற்றது—இலக்கியத்திலும் அது உண்மை அடிப் படை யற்றது என்றுதான் சொல்ல வேண்டும். அந்த நாட்களில் தமிழ்க் கவிதைக்கு அகத்துறை, புறத்துறை என்றும், திணைகள் என்றும் இலக்கிய மரபுகள் தோன்றியதுபோல இன்றைய இலக்கியத்தில் ஒரு மரபாகக் காதல் தோன்றி யிருக்கிறது என்று சொல்லலாம். காதலை ஒரு கோட்ஸ்டாண்டாகக் கொண்டு அதிலே சம்பவங்கள் என்னும் பல தரப்பட்ட துணிகளை மாட்டி வைக்கிருர்கள் ஆர்வி, அகிலன் போன்ற ஆசிரியர்கள்.

மணி: காதலுக்கு இலக்கியத்திலோ வாழ்விலோ மதிப்பே இல்லவே இல்லை என்கிருயா நீ?

ராஜா : மதிப்புண்டு, மதிப்புண்டு. மதிப்பே இல்லை என்று சொன்னல் காதலை நம்பிப் பிழைக்கிற ஆசிரி

யர்களும், அதையே நம்பி வாசிக்கிற வாசகர்களும் என்மேல் படை எடுத்துக் கற்களை வீசத் தொடங்கி விட மாட்டார்களா? ஆனல் அது வெறும் இலக்கிய மரபு என்று உணர்ந்து கலை செய்ய வேண்டும். உலகத்தில் சிறந்த காதல் கதைகளையும், காவியங் களையும் எழுதிய சிறந்த ஆசிரியர்கள்கூட அதை இலக்கிய மரபு என்று உணர்ந்துதான் செய்திருக் கிறார்கள். காதல் இலக்கிய மரபுதான்; காமம், ஒரு ஆணுக்கும் ஒரு பெண்ணுக்கும் உள்ளக் காமக் கவர்ச்சி, இலக்கியப் பொருள். தற்காலக் காதல் நாவலாசிரியர்களிலே இந்தக் காமக் கவர்ச்சிதான் தவறுதலாகக் காதல் என்று பெயர் பெற்று ஆட்சி செலுத்துகிறது. அதனுல்தான் இந்த நாவலாசிரி யர்கள் செய்கிற இலக்கிய முயற்சி தோல்வியுறு கிறது என்று எனக்குத் தோன்றுகிறது.

மணி: நீ சொன்ன அடிப்படையை ஏற்றுக்கொண் டால் இந்த நாவல்கள் தோல்வியுறுகிறவை என்று தான் சொல்ல வேண்டும்.

ராஜா: நான் சொல்கிற அடிப்படையை ஏற்றுக் கொள்ள ஆக்ஷேபம் ஏதாவது தோன்றுகிறதோ உனக்கு?

மணி: தோன்றவில்லை எனக்கு உடனடியாக என் பதனுல் உன் கட்சி சரியானது என்று ஏற்பட்டு விடாது.

ராஜா: இலக்கியத்தில் கட்சி கட்டுவது முக்கியமல்ல. கட்சி கட்டுவது மிகவும் சாதாரணமான சில்லறை விஷயம். கட்சிகள் முக்கியமல்ல. இலக்கியப்

போக்கை நேராகக் கணித்துக்கொண்டு, கண்டு சொல்வது என்பதுதான் முக்கியம்.

மணி: இப்படிக் கண்டு சொல்லுகிற முயற்சியிலே சிலருக்கு மிகவும் கசப்பாக இருக்கிற உண்மைகள் சில அடிபடத்தான் படும் என்கிருய் நீ?

ராஜா: கசப்பு, இனிப்பு என்பதற்கெல்லாம் இலக்கிய விசாரத்திலே இடமே கிடையாது. இன்பியல் நாடகம், துன்பியல் நாடகம் என்கிற பிரிவினை கூட மேலே நாடுகளில் இலக்கியத் துறையிலே ஆட்சி செலுத்துகிறது உண்மைதான் என்ருலும், இன்பியல் துன்பியல் இரண்டுமே இலக்கியத்துக்குத் தொடக்கம் என்றுதான் சொல்ல வேண்டும். தவிரவும் கிரேக்க அடிப்படையில் எழுந்த துன்பவியல், இன்பவியல் சித்தாந்தங்கள் நமக்குப் பொருந்தாது.

மணி: நாவலைப்பற்றி அதிகம் பேசிவிட்டோம் என்று எண்ணுகிறேன். நாடகங்களைப் பற்றிப் பேசலாமா?

ராஜா: நாவல்களைப்பற்றி அதிகம் பேசிவிட்டோமா? பேச வேண்டியதில் இன்னும் பத்தில் ஒரு பங்கு கூடப் பேசவில்லை நாம் என்று சொல்ல வேண்டும். தமிழ் நாவல்களைப் பற்றிக்கூட ஒரு கோடி பூராவும் பேசி முடித்துவிட்டோம் என்று சொல்ல முடியாது

மணி: ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்கிறமாதிரி உன் அபிப்பிராயந்தான் நீ சொன்னவற்றிலிருந்தே தெளிவாகத் தொனிக்கிறதே?

ராஜா: இலக்கியத்தில் ஒரு கோடி காட்டிவிட்டால் போதும்; மற்றதைத் தானுகவே நல்ல வாசகன் பிடித்துக் கொள்கிருன். ஆனுல் இலக்கிய விசாரத்

தில் மட்டும் பூரா விஷயத்தையும் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் உண்டு.

மணி: இலக்கிய விசாரம் இந்த விஷயத்தில் இலக்கியத்தை எட்டித் தொடாது என்கிருய் நீ?

ராஜா: ஓரளவுக்கு அது சரி. அதாவது இலக்கியத்தில் எந்தத் துறையுமே பூர்த்தியானது; இலக்கிய விசாரத் துறை மட்டும் என்றுமே பூர்த்தியாகாதது—பூரணமாக முடியாதது.

மணி: அப்படியென்ருல் உலகத்திலே நாலு காவிய கர்த்தாக்கள், நாலு நாவலாசிரியர்கள் என்று எடுத்துச் சிறப்பாகச் சொன்ன மாதிரி நாலு இலக்கிய விசாரகர்கள் சொல்ல முடியாது என்கிருயா நீ?

ராஜா: முடியாது என்று எனக்குத் தெரியும். முடிகிறதா என்று நீ யோசித்துத் தான் பாரேன்.

மணி: எனக்குத் தெரியவில்லை.

ராஜா: இலக்கியத்தைவிட அதிகமாக, பத்திரிகை எழுத்தைப் போலவே இலக்கிய விசாரமும் காலத்தால் கட்டுண்டு நிற்கிறது. இலக்கியத்தைப் போல இலக்கிய விசாரத்துக்குக் காலத்தை மீறும் வசதி மிகவும் குறைவு. ஆகையால்தான் கவிகளில் டாண்டேயைப் போல, நாவலாசிரியர்களில் டாஸ்டாவ்ஸ்கியைப் போல எடுத்து உதாரணமாக, சிகரம் என்று காட்ட ஒரு இலக்கிய விமரிசகன் கூடக் கிடையாது என்று தான் சொல்ல வேண்டியதாக இருக்கிறது.

மணி: இரண்டாயிரம் வருஷங்களுக்கும் அதிகமாக விமரிசனக் கலையைப் போற்றி வளர்த்துவரும் மேலை நாடுகளிலே இப்படியென்ருல், நம் ஊரில்....

ராஜா : இலக்கிய விசாரத்தை இலக்கணமாகவும், அலங்கார சாஸ்திரமாகவும் செய்துவிட்டு, இலக்கிய கர்த்தா இலக்கிய விசாரகனுகை இருக்கக் கூடாது என்று நமது சம்ஸ்கிருத, தமிழ் முன்னோர்கள் நகர்ந்துவிட்டார்கள். வியாக்கியான கர்த்தாக்கள் உண்டு நம்மிடையே—விமரிசகர்கள் கிடையாது. நாவலைப் போல, சிறு கதையைப் போல, ஓரங்க நாடகத்தைப் போல, இலக்கிய விசாரமும் தமிழில் புதுத்துறை. இந்தியாவிலே புதிய இலக்கியத்துறை. இனிமேல்தான் தவழ்ந்து விளையாடி நிமிர்ந்து நிற்க வேண்டும்.

மணி : மேலைநாட்டுப் பாணியிலேதான் அது நம்மிடையேயும் செல்லவேண்டும் என்று ஏதாவது அவசியமுண்டா?

ராஜா : அவசியமேயில்லை. உண்மையில் சொல்லப்போனல் இலக்கியத்தில் எந்தத் துறையுமே மொழிக்கேற்றபடியும், அந்த மொழியைக் கையாளுகிற ஜனங்களின் பண்புகளுக்கேற்றபடியும் மாறி அமைகிறது. அதனுல்தான் இலக்கிய உருவம் ஒன்றுதான் என்ருலும், வெவ்வேறு மொழிப் பிரதேசங்களில் வெவ்வேறு விதமாக வளருகிறது. பிரெஞ்சு நாவல் ஆங்கில நாவலிலிருந்து மாறுபட்டிருப்பதற்குக் காரணம் இதுவேதான். மரபு என்கிற மரம் பல கிளைகளாகத் தழைத்து விரிந்து விதம் விதமாகப் பூக்கிறது. ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு விதமாகப் பூக்கிறது என்று கொள்ளலாம்.

மணி : அது சரி. சற்றுமுன் தமிழ் நாவலைப் பற்றியே பேசி முடியவில்லை என்ருயே-எதை, யாரை நினைத்

துக்கொண்டு சொன்ஞய்—அதைச் சொல்லு முதலில். பின்னர் இலக்கிய விசாரம், நாடகம், சிறு கதை முதலிய துறைகளைப்பற்றிப் பொதுவாக விசாரிக்கத் தொடங்கலாம்.

ராஜா: அதுவா? தமிழில் காதல் அடிப்படையில் எழுகிற புரட்சி நாவல்களைப் பற்றிச் சொன்னேன். அவற்றில் பெரும்பாலானவையில் ஆசிரியனும் வாசகனும் தன்னையே கதாநாயகனுகக் கொண்டு ஒரு பெண்ணின் அல்லது பல பெண்களின் பலஹீனத்தைச் சுற்றி வருகிற நாவல்கள்தான் அதிகம். இந்தத் துறையில் வெற்றி பெற்றவர்கள் பலர். அவர்களுக்கு உதாரணமாக அகிலனைச் சொல்லலாம்.

மணி: சிநேகிதியில் கையாண்டதையே தான் பட்டணத்துப் பால்காரன் தன் தகரக் குவளையில் பால் குறையக் குறையத் தண்ணீரைவிட்டு நிரப்பிக்கொள்வது போல, நமக்கு மறுபடியும் தன் பாவை விளக்கிலும் அளிக்கிருர் அகிலன் என்று சொல்லப் போகிருய் நீ.

ராஜா: நீ சொன்ன உதாரணம் சரி என்றே தோன்றுகிறது. பால்காரன் குவளையைப் போல வற்ருத ஜலப்பால் உள்ள கற்பனையூற்ருக நாவலாசிரியனின் மனம் மாறிவிடுகிறது. ஒன்றில் செய்வதையே திரும்பத் திரும்ப ஒவ்வொரு நாவலிலும் செய்துகொண்டு உட்கார்ந்திருப்பவர்கள் பலர் இன்று நம்மிடையே இருக்கிருர்கள். இவர்கள் எழுத்திலே மாதிரிக்கு ஒவ்வொன்று பார்த்தால் போதும். வேறு பார்க்க வேண்டியதேயில்லை.

மணி : மு. வ. அவர்களுடைய நாவல்களைப் பற்றியும் உன் அபிப்பிராயத்தைச் சொல்லிவிடு. அத்துடன் தமிழ் நாவலைப் பற்றிய அத்தியாயத்தை ஒரு வழியாக முடித்துக்கொள்ளலாம்.

ராஜா : சாதாரணமாக நாவலாசிரியர்களில் பெரும்பாலோர் மனுஷ்ய உறவைத்தான் அடிப்படையாக வைத்து நாவல்கள் எழுதுவார்கள். ஆனல் சில நாவலாசிரியர்கள் மனுஷ்யர்களையும் அவர்களின் உறவுகளையும் புறக்கணித்துவிட்டு நாவல்கள் எழுதுகிருர்கள். தனி மனிதனே அவன் மற்றவர்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதோ இந்த நாவலாசிரியர்களுக்கு முக்கியமல்ல. மனிதர்கள் என்று சொல்லப்படுகிறவர்கள் ஒவ்வொருவரையும் ஒரு சிந்தனையின், ஒரு கொள்கையின் உருவகமாகப் பாவிக்கிருர்கள்.

மணி : மனிதனைவிட மனித சிந்தனை மு. வ. வின் நாவல்களிலே முக்கியத்வம் பெற்றுவிடுகிறது என்கிருய் நீ—இல்லையா? உண்மை என்றுதான் நானும் சொல்லுவேன்.

ராஜா : எனக்கு என் நாவலில் உருவாக்குவதற்கு ஒரு கம்யூனிஸ்டு தோழர் தேவையாக இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். நான் நாவலாசிரியனுக எழுதும்போது தோழர் கிருஷ்ணன் என்கிற என் நண்பரை உருவகப்படுத்திக் கொண்டு எழுதுவேன். மு. வ. கம்யூனிஸ சிந்தனையில் தொடங்குவார். தோழர் கிருஷ்ணன் நிழல்போலத்தான் உருவமளிப்பார் அவர் எழுத்திலே. இப்படியே பல சிந்தனைகளை மனித உருவில்லாமல், சிந்தனை உருவ

மாக நமக்குச் செய்து தந்திருக்கிருர் வரதராசஞர். திருக்குறள் பண்புகள் பலவற்றை அவர் இப்படித் தான் நமக்கு உருவகப்படுத்தித் தந்திருக்கிருர் என்று சொல்லவேண்டும்.

மணி: அது தவறு என்று சொல்லமுடியுமா?

ராஜா: தவறு என்று சொல்ல நான் யார்? அது அவர் எழுதுகிற முறை. ஆனல் நாவலுக்கு அடிப்படை என்று நான் கருதுகிற மனுஷ்ய உறவு அவர் முறையிலே அற்றுப் போய்விடுகிறது. சிந்தனைகள் தான் தனித்து நிற்கின்றன என்பது என் அபிப் பிராயம்.

மணி: வேறு சில நாவலாசிரியர்களும் கூடத் தத்துவ விசாரத்துக்கும் சிந்தனைகளுக்கும் தான் முக்கிய மளிக்கிருர்கள்—சிந்தனைகளை உருட்டித் திரட்டித் தருவதுபோல, கதாபாத்திரங்களையோ, சம்பவங் களையோ உருவாக்குவதில்லை என்று குறை சொல் லத் தோன்றுகிறது.

ராஜா: தத்துவ விசாரமோ சிந்தனையோ இலக்கியத் துக்கும் நாவலுக்கும் புறம்பான விஷயங்கள் அல்ல. அவற்றையும் சேர்த்துக் கலையாக்கித் தருகிறவனை அசாதாரணமான ஒன்றைச் சமைத்து நமக்குத் தருகிறவன் என்று நாம் பாராட்ட வேண்டும்.

மணி: சிந்தனையும் தத்துவ விசாரமும் கலையாகி விட்டால் பாராட்ட வேண்டியதுதான். கலையாகாமல் தொக்கி நின்ருல்...

ராஜா: நாவலாசிரியர் சிந்தனையாளரிடம் தோற்று விட்டார் என்றுதான் சொல்லவேண்டும். மதம்,

நல்லது-தீயது, சமதர்மவாதம், சீர்திருத்தம் என்று எதற்காகவும் பிரசாரம் செய்ய எழுதப்படும் நாவல்கள் எல்லாமே இந்த அளவில் தோல்வியடைந்தவை என்றுதான் சொல்லவேண்டும்.

மணி: சமூக சீர்திருத்தம் என்பதே நாவல் எழுதுவதில் நமக்கு மரபாகத்தான் வந்திருக்கிறது.

ராஜா: தமிழில் மட்டுமென்ன—உலகில் பல மொழிகளிலும், இந்திய மொழிகள் பெரும்பாலானவற்றிலும் பிரசார நாவல் தனி ஒரு ரகமாகத் தோன்றியே வந்துள்ளது. ஆனல் மாதவையா முதல் இன்றைய அண்ணுத்துரை, ஆசைத்தம்பி வரையில், சுப்பிரமணிய பாரதியார் முதல் வ. ரா. வரையில் அவர்கள் நாவல் எழுதிய நோக்கங்களைப் பாராட்டலாமே தவிர நாவல்களாக அவர்கள் நூல்களைப் பாராட்ட முடியாது என்பது உண்மை.

மணி: சோஷலிஸ்டு ரியாலிஸம் என்று ருஷ்யாவில் அமர்க்களப்படுகிற இலக்கிய வழிபற்றி இதுதான் உன்னுடைய முடிவான அபிப்பிராயம் என்று கொள்ளலாமா?

ராஜா: நிச்சயமாக. சோஷலிஸ்டு ரியாலிஸம் என்பது சோஷலிஸமும் அல்ல—ரியாலிஸமும் அல்ல. அடிமைப்பட்ட ருஷ்யாவிலே எழுத்துச் சுதந்திரம் இருந்தது—டாஸ்டாவ்ஸ்கியும், டால்ஸ்டாயும் தோன்றினர்கள். அடிமைப்பட்ட சோஷலிஸ்ட் ருஷ்யாவிலே முதல் பலியாகிவிட்டது எழுத்துச் சுதந்திரம்தான்.

மணி: எழுத்துச் சுதந்திரமுள்ள மற்ற நாடுகளும் அப்படி ஒன்றும் பிரமாதமான இலக்கியம் உற்

பத்தி செய்துவிடவில்லை என்றுதானே சொல்ல வேண்டும்.

ராஜா: உண்மைதான். ஆனால் எழுத்துச் சுதந்திரம் உள்ள இடத்திலே நல்ல இலக்கியம் பிறக்க வழி யுண்டு; பிறக்கவில்லை. சோஷலிஸ்டு ரியாலிஸமே மதம் என்றிருக்கிற நாட்டிலே நல்ல இலக்கியம் தோன்ற இயலாமல் போய்விடும் என்பதுதான் விஷயம்.

மணி: இருக்கலாம். அநுபவித்துப் பார்க்க வேண்டிய விஷயம் அது. பிரசார நாவல் நாவலே அல்ல என்கிறாய் நீ. போகட்டும். எனக்கும் பிரசார நாவல் கள் பிடிப்பதில்லை. நல்ல விஷயத்தையே பிரசாரம் செய்தாலும்கூட, இது எனக்குத் தேவையா என்று சிந்திக்க எனக்குச் சுதந்திரம் வேண்டும்தான்.

ராஜா: நாவல் இலக்கியம் பற்றி இன்னும் இரண்டே இரண்டு விஷயங்கள் இங்கு சொல்லிவிட்டால், இப்ப சத்தியாகப் போதும் என்று எண்ணலாம்.

மணி: என்னென்ன?

ராஜா: அமெரிக்காவில் பிறந்து, இங்கிலாந்திலே தன் பிற்காலம் முழுவதையும் கழித்த ஹென்ரி ஜேம்ஸ் என்பவரின் நாவல்களிலும் விமரிசனத்திலும் பரி சயம் தமிழ் நாவலாசிரியர்களுக்குத் தேவை—மிகவும் உடனடியான தேவை என்று நான் எண்ணுகிறேன். அந்தப் பரிசயத்தினால் தமிழ் நாவல் கலை பிரமாத மாக வளரும் என்பது என் நம்பிக்கை. நான் எழுதுகிற அளவில் எனக்கு ஹென்ரி ஜேம்ஸின் எழுத்து சிறப்பான வழிகாட்டியாகவே இருந்திருக் கிறது என்றுதான் நான் சொல்லுவேன்.

மணி: சரி, ஹென்ரி ஜேம்ஸைப்பற்றி இருக்கட்டும். தாமஸ் மானைப் போல அவனையும் படிப்பது சிரமமான காரியம்தான். உன்னைத் தவிர இது பற்றி யார் கஷ்டப்பட்டு மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்ளப் போகிறார்கள்? இரண்டாவது விஷயம் ஏதோ பாக்கி இங்கு சொல்வதற்கு என்றாயே—அது என்ன?

ராஜா: அதுவா? ஐரோப்பிய நாவல் இலக்கிய வளம் போலவே ஆசியாவிலும், தென் அமெரிக்காவிலும் சிறப்பாக நாவல் இலக்கியம் வளர்ந்திருக்கிறது. அவற்றையும் தமிழ் நாவலாசிரியன் அறிந்து கொண்டிருக்க வேண்டும்—நேரடியாகவோ மறைவாகவோ என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

மணி: இலக்கியத்தைப்பற்றிய வரையில் நீ பேராசைக்காரன் என்றுதான் சொல்லவேண்டும்.

ராஜா: நாவலைப்பற்றி இது போதும் என்று தோன்றுகிறது. கதையில் சிறு கதை என்கிற விஷயத்தைப் பார்ப்போம். சிறிது சிறிது என்று சொல்வது பொருத்தம். ஏனென்றால் ஒவ்வொரு துறையையுமே விரிவாகக் கவனிப்பது என்றால் நமக்கு ஒரு நாள் பொழுது போதாது—ஒரு வாரமும் போதாது. பேசித் தீர்த்து விடமுடியாத விஷயங்கள் பலவுண்டு.

மணி: வாரம் பூராவும் உட்கார்ந்து இலக்கியத்தைப் பற்றிப் பேச உனக்கு ஆக்ஷேபமிராது என்று எனக்குத் தெரியும். எனக்குத்தான் நாளைக்கு ஆபீஸ் உண்டு. காலையில் மார்க்கெட்டுக்குப்போய் கத்திரிக்காய் பேரத்திலீடுபடுகிற அவசியமும் உண்டு.

ராஜா: சிறுகதை தமிழுக்கு மட்டும் புதுசல்ல—உலக இலக்கியத்திலே அதுதான் கடைக்குட்டி என்று சொல்லவேண்டும். கவிதையை மூத்த பிறப்பு என்ருல், சிறு கதையைக் கடைசிக் குழந்தை என்று சொல்லவேண்டும்.

மணி: இருந்தும் இன்று சிறு கதைகள் தான் மற்ற எல்லாப் பகுதிகளையும் கூட அதிகமாகப் பரப்பும் விஸ்தீரணமும் காட்டுகிறது என்று சொல்ல வேண்டும் இல்லையா?

ராஜா: பரப்பு, விஸ்தீரணம் என்று சொன்னது சரி. ஆழம், சரியானபடி இல்லை சிறு கதை இலக்கியத்திலே என்று சொல்வதும் பொருத்தமாகும்.

மணி: அதற்கு முக்கிய காரணம் பத்திரிகையின் குழந்தையாக இருக்கிறது சிறுகதை என்பது தான்—இல்லையா?

ராஜா: ஓரளவு பத்திரிகைத் தேவை காரணமாகத்தான் சிறு கதைகள் சமீப காலத்தில் அதிகமாகத் தோன்றியிருக்கின்றன என்று சொல்லவேண்டும். ஆனல் ஒரே ஒருவர் எழுத்தில் மட்டும் சிறுகதை சிறப்பான ஆழம் பெற்றது. அதுவும் ஒரு ருஷ்யன் தான்—ஆண்டன் செகாவின் சிறுகதைகள் பரப்பையும், விஸ்தீரணத்தையும் காட்டுவதுடன் ஆழத்தையும் காட்டுகின்றன. ஆனல் செகாவ் கதை பாணி சுலபத்தில் யாருக்கும் கைவந்துவிடாது. அதுவும் ஆங்கிலத்தில் மேலெழுந்தவாரியான கதைகளும், பிரெஞ்சு மொழியில் உருவச் சிறப்பு வாய்ந்த கதைகளும் சிறப்பாகக் கையாளப் படுகின்றன. அமெரிக்

கச் சிறுகதை நடை கம்பீரத்துக்கும் ஒரு திடீர்த் திருப்பத்துக்கும் பெயர் போனவை.

மணி: நான் படித்துள்ள சில ஐரிஷ் கதைகளும், ஸ்வீடிஷ் கதைகளும் ஆழமும் உருவமும் கலந்து திகழ்கின்றன—ஆனல் செகாவுக்கு அடுத்தபடியாகத் தான் என்று நான் சொல்லுவேன்.

ராஜா: உண்மைதான். செகாவை முன்னர் சொன்ன காவிய கர்த்தாக்கள், நாவலாசிரியர்கள் இவர்களுடன் சேர்க்க வேண்டும்.

மணி: மோபாஸான் அன்பர்கள் கோபிக்கக் கூடுமே!

ராஜா: மோபாஸானின் கதைகளிலே ஒரு நயமான சொல்லமைதியும், அழகான உருவமும், சொல்லாமல் சொல்லும் திறனும் உண்டு. ஆனல் செகாவ் வாழ்க்கை அநுபவங்களை அழுத்திக் காட்டுவது போல அவர் காட்டுவதில்லை. ஒரு நோக்கத்தைச் சொல்லுகிற சாக்கிலே, பல நோக்கங்களைச் சொல்லிச் சாதித்து விடுகிற கலை செகாவுக்குக் கை வந்ததுபோல, சிறு கதையில் வேறு யாருக்குமே வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

மணி: உலகத்துக்கெல்லாம் கதைப் பொக்கிஷமாக இந்தியா இருக்கிறது. எனினும் இந்தியச் சிறுகதை தோன்றி நாற்பது ஐம்பது வருஷங்களுக்குமேல் ஆகிவிடவில்லை. சிறு கதைக்கு ஒரு இந்திய உருவம் ஏற்பட்டிருக்கிறது. அல்லது ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்பது உண்மையா? அல்லது ஒரு தனி உருவம் வேண்டியது அவசியமா? சொல்லு. நீ என்ன நினைக்கிருய்?

ராஜா: இதில் நான் தனியாக நினைப்பதற்கு ஒன்றுமே யில்லை. இந்தியச் சிறுகதை தானாகவே இந்திய உருவமும், அர்த்தமும், ஆழமும் பெறுகிறது என்பதுதான் உண்மை. கவி ரவீந்திரநாத தாகூர் இந்தியச் சிறுகதைக்கு இந்திய உருவம் கண்டு வெற்றி பெற்றார் என்று எண்ணுகிறேன் நான். பிரேம்சந்த் முதலியவர்கள் இதே உருவத்தைப் போற்றி வளர்த்தார்கள்.

மணி: தமிழில்?

ராஜா: தாகூரைப் பின்பற்றி வ. வே. சு. ஐயர் தமிழில் சிறு கதைகளைச் சமைத்துத் தந்தார். குளத்தங்கரை அரசமரம் என்று பிரசித்தி பெற்ற வ. வே. சு. ஐயர் கதையே ஒரு தாகூர் கதைதான். ஆனால் புதுமைப் பித்தன் என்கிற மேதையின் கையில் தமிழ்ச் சிறு கதை பிரமாதமாக வளம் பெற்றது. இந்த வளத்தில் விஷயத்துக்குப் பிரதானம் அதிகம்—புதுமைப் பித்தன் உருவத்துக்குப் பிராதான்யம் தரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அதே சமயத்தில் ஒரு பதினைந்து சிறு கதைகள் எழுதிவிட்டு ஓய்ந்து விட்ட மௌனி என்பவரும் சிறுகதையில் எட்டாத விஷயங்களையும் கொணர்ந்து தர முயன்றார். அவர் செய்த முயற்சியில் வெற்றியும் பெற்றார். அவரை Kaffka என்கிற ஜெர்மன் சிறு கதாசிரியருக்கு ஒப் பிடலாம்—ஒருவிதத்தில். தத்துவ வேகமும், தத்துவ தரிசனமும் அவர் எழுத்திலே முக்கியமான விஷயங்கள்.

மணி: உருவத்தைச் சிறப்பாகக் கையாண்டவர்கள் யாரும் இல்லையா?

ராஜா: ஓரளவு ஆங்கிலப் பரிசயத்தினுல் உருவத்தை அறிந்து சிறுகதை எழுதியவர்கள் கு. ப. ராஜ கோபாலன், ந. பிச்சமூர்த்தி, ந. சிதம்பர சுப்பிர மணியம் முதலியவர்கள். இவர்களுடைய சிறு கதைகளுக்கு ஈடாகச் சிறப்பான சிறுகதைகள் எழுதியவர்கள் என்று மணிக்கொடி தலைமுறையைச் சேர்ந்தவர்கள் இன்னும் ஏழெட்டுப் பேர்வழிகளைச் சொல்லலாம்.

மணி: சிறுகதை ஆரம்ப வேகத்துடன் தடைப்பட்டு நின்றுவிட்டது. மேலே வளரவில்லை என்பது உண்மையா?

ராஜா: ஓரளவு உண்மைதான். இதற்குக் காரணம் என்று சொல்ல வேண்டுமானுல்—பரிசோதனை செய்ய இலக்கியாசிரியர்களுக்கு மனமில்லை என்று சொல்ல வேண்டும். பத்திரிகைகளுக்கு இப்படி எழுதினுல் போதும்—இப்படி எழுதினுல்தான் போடுவார்கள் என்கிற ஒரு நினைப்பும் ஏற்பட்டு விட்டதைத் தமிழ் இலக்கியத்தின் துரதிருஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

மணி: அப்படியானுல் 1945-க்குப் பிறகு சிறப்பாகச் சொல்லக் கூடிய சிறு கதாசிரியர்களே யாரும் இல்லை என்றுதான் நீ சொல்லுவாயா?

ராஜா: அப்படியும் சொல்ல முடியுமா? ஒரு சிலர் இந்த வறட்சியிலேயும்கூட ஓரளவுக்குச் சிறப்பாகச் சிறு கதை எழுத முயன்றிருக்கிருர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். குறிப்பாக தி. ஜானகிராமன், லா. ச. ராமாமிருதம், கு. அழகிரிசாமி முதலியவர்கள்

நல்ல சிறுகதைகள் எழுதியிருக்கிறார்கள். சமீபத்தில் நாலைந்தே நல்ல சிறுகதைகளை எழுதியிருக்கிறார். சுந்தர ராமசாமி என்று ஒருவர். அவரும் இதே சோதனை வேகத்தில் சென்றாரானால் மிகவும் சிறப்பாகத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்துக்குச் சேவை செய்வார் என்று சொல்லலாம்.

மணி: நீ சொல்வதைப் பார்க்கும்போது ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்துடன் எழுதுகிறவர்கள் தான் சிறந்த சிறுகதாசிரியர்கள் என்று நீ நினைக்கிற மாதிரித் தெரிகிறது. அதாவது Flash back, மனோ தத்துவ அடிப்படை என்று இரண்டொரு விஷயங்களை மட்டும் வைத்து எழுதப்படுகிற சிறு கதைகள் மட்டுமே உனக்குப் பிடிக்கிற மாதிரி இருக்கிறது. அதை வைத்து இவர்கள்தான் நன்றாக எழுதுகிறார்கள் என்று நீ சொல்லிவிடுகிற மாதிரித் தெரிகிறது எனக்கு.

ராஜா: இலக்கிய விசாரம் அப்படிச் செய்யப்படுவதில்லை. நான் சொன்ன ஆசிரியர்களிலேகூட எனக்குப் பிடிக்காத விஷயம் எழுதுபவர்கள் உண்டு தான். உதாரணமாக லா. ச. ராமாமிருதத்தின் சிறு கதைகளிலே பல எனக்கு விஷயத்தைப் பொறுத்த அளவில் உவப்பாக இருப்பதில்லை. சிதம்பர சுப்பிரமணியன் கையாளுகிற சரிகை அங்கவஸ்திர விஷயங்களும் எனக்குப் பிடிப்பதில்லைதான். நான் ஒரு சிறு கதையை மதிப்பிடும்போது அது இலக்கியரீதியில் எந்த அளவு பூரணத்வம் பெற்றிருக்கிறது—உருவம், விஷயம், சூழ்நிலை, குணசித்திரம், ஒரு நிமிஷத்தின் பாவம் இதெல்லாம் எந்த அளவுக்கு விகசித்துப்

பூரணத்வம் பெற்றிருக்கின்றன என்று கவனித்தே சொல்லுகிறேன். எனக்கு மிகவும் பிடித்தமான விஷயங்களைமட்டும் சிறு கதையில் எழுதுகிறவர் என்று நான் மௌனி ஒருவரைத்தான் சொல்வேன். புதுமைப்பித்தன் சரிசமமாகப் பிடிக்கிற விஷயத்தை யும் பிடிக்காத விஷயத்தையும் கையாளுகிருர்.

மணி: இருந்தாலும் தமிழ்ச் சிறுகதைப் பரப்பிலே விஸ்தீரணம் ஏராளமாக இருக்கிறது. அதிலே இன்னும் பலராவது நல்ல கதைகள் எழுதியிருக் கிருர்கள் என்றுதான் நான் சொல்லுவேன்.

ராஜா: உதாரணமாகச் சொல்லு. வெறுமனே ஆகா யத்தில் அளந்து கொண்டிருப்பதை விட, பெயர் சொல்லி அளந்து பார்க்க முற்படுவது இலக்கிய விசாரத்தில் ஆதார ஆரம்பம் என்று சொல்லலாம். இன்று தமிழ் இலக்கிய விசாரம் உள்ள நிலையில் பெயர் சொல்லி விமரிசனம் செய்வது சில சந்தர்ப்பங் களில் அசௌகரியமாக இருந்தாலும், அதுதான் அவசியம் செய்ய வேண்டிய விஷயம். பெயர் சொல்லிச் சொல்லு. அவர்களை நான் ஏன் என் பட்டியலில் சேர்க்கவில்லை என்பதற்கு முடியுமானல் காரணம் தெரிவிக்கிறேன்.

மணி: பி. எஸ். ராமையா?

ராஜா: சிறுகதைகள் என்று காலத்திஞல் நாலு தலை முறை அல்லது இடத்திஞல் நாலு இடம் அல்லது கருத்திஞல் நாலு கருத்துக்களைச் சேர்த்துக் குறு நாவல்களைக் கதைகளாக்கித் தருகிருர் அவர். ஆரம்ப காலத்தில் ஒரே ஒரு சிறுகதை முயற்சி செய்தார்

என்று சொல்லலாம். இப்போதெல்லாம் அவர் சிறு கதைகள் எழுதுவதேயில்லை என்று தெளிவாகச் சொல்லலாம்.

மணி: த. நா. குமாரஸ்வாமி?

ராஜா: அவருடைய ஆரம்ப காலத்திய கதைகளில் ஒரு romantic கற்பனை சிறப்பாக இருந்தது உண்மை தான். கன்னியாகுமரி முதலிய கதைகளைத் தமிழில் நல்ல கதைகள் என்று சொல்லலாம்தான். ஆனாலும் அவர் சோதனை சிறப்பாக வெற்றிபெறவில்லை. அவரும் திருப்பித் திருப்பி ஒரே சோதனையைச் செய்தாரே தவிர மேலே நகரவில்லை.

மணி: சி. சு. செல்லப்பா?

ராஜா: சூழ்நிலையைப் பூரணமாகச் சித்திரிக்கிற பல கதைகளைப் பின்னாலே எழுதியிருக்கிறார். ஆனால் சூழ்நிலை உருவாகிற அளவுக்கு, அவர் சிறுகதைகளிலே ஆழமோ அர்த்தமோ தொனிப்பதில்லை. விஷயத் தெளிவு இல்லை.

மணி: இப்படியே நூறு பெயர்களைச் சொல்லிக் கொண்டு போகமுடியும் என்னால். ஆனால் அது அவசியமில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது.

ராஜா: அவசியமில்லைதான். நான் எந்த அம்சத்தில் சிறப்பைக் கண்டு நல்ல சிறு கதாசிரியர்கள் என்று பத்துப் பேர்வழிகளைச் சொல்லுகிறேன் என்பதைச் சொன்னேனானால் விஷயம் தெளிவாகி விடும்.

மணி: சொல்லு.

ராஜா: இலக்கியம் எல்லாவற்றிற்குமே பொதுவான ஒரு விதி இது. எழுதப்பட்டுள்ளது எதில் ஒரு

பூரணமான ஆசிரிய உருவமும் நோக்கமும் தெளிவு படுகிறதோ அங்கேதான் இலக்கியம் பிறந்திருக் கிறது என்று சொல்லவேண்டும்.

மணி: ஆசிரியரின் முழு personality யும் அவன் எழுத்து ஒவ்வொன்றிலும் தெரியவேண்டும். ஒவ் வொரு பனித்துளியிலும் முழுச் சூரியனும் தெரிகிற மாதிரி என்கிருய்.

ராஜா: நீ சொன்ன உதாரணம் உவப்பானது. உப யோகித்து உபயோகித்துத் தேய்ந்து போனதுதான் என்ருலும் விஷயத்தைத் தெளிவாக்குகிறது என்று வைத்துக் கொள்ளலாம். இந்த முழு personality யையும் சில ஆசிரியர்களுடைய சிறுகதைகளிலே தான் நாம் காண முடிகிறது. இந்த integrated personality என்கிற தனி மனிதனின் பூரணத்வம் காணக் கிடக்கிற எழுத்திலேதான் இலக்கியத் தரம் காணமுடியும். நான் சொன்ன பத்துப் பன்னிரண்டு சிறுகதாசிரியர்களிலே இன்று நாம் இந்தப் பூரணத் வத்தைக் காண முடிகிறது.

மணி: தமிழில் நூற்றுக் கணக்கான பேர்வழிகள் சிறு கதைகள் எழுதுகிருர்கள். அவர்களில் ஒரு பத்துப் பேர்தாளு நல்ல சிறுகதாசிரியர்கள்? ஆச்சரியமாக இருக்கிறதே!

ராஜா: நூற்றுக் கணக்கான பேர்வழிகளில் ஒரு பாதிப் பேராவது நன்ருகவேதான் எழுதுகிருர்கள். மொழி வளத்துக்கும் இலக்கிய அடிப்படை வளத்துக்கும் இத்தனை பேர் நன்ருக எழுதுவது ஒரு சிறப்புத் தான். ஆனுல் நல்ல சிறுகதாசிரியர்கள் என்று

சொல்லக் கூடியவர்கள் ஒரு பத்துப் பன்னிரண்டு பேர் இருந்தால் போதாது என்று எப்படிச் சொல்ல முடியும்? பிற மொழிகளிலும் கூடச் சிறுகதைகள் இலக்கிய அந்தஸ்துடன் எழுதியவர்கள் வெகு சிலர் தான் என்பதைக் காணும்போது, தமிழில் பத்துப் பதினைந்து சிறுகதாசிரியர்கள் இருக்கிறார்களா? அடேயப்பா! இத்தனை கதைகள் நல்ல கதைகள் இருந்தால் இலக்கியம் தாங்குமா என்று கேட்கத் தோன்றும்.

மணி: பேஷ்! பேஷ்!

ராஜா: இலக்கியத்தில் தரம் சொல்லும்போது மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். சந்தேகாஸ்பத மானது எல்லாவற்றையும் ஒதுக்கிவிட வேண்டும். அப்படி ஒதுக்கியும்கூடக் காலதேவன் நாம் சேர்த்த தில் பாதியை ஒதுக்கி விடுவானோ என்கிற பயம் இயற்கைதான்.

மணி: இலக்கிய விசாரத்திலே தர விமரிசனம் என்று புதுசாக ஒன்று சொல்லத் தொடங்கி விட்டாயே, அது என்ன?

ராஜா: இலக்கிய விசாரத்தின் நோக்கமே தர விமரிச னம் செய்ய முற்படுவதுதான். வெறுமனே நாவல், சிறுகதை, நாடகம் என்று என்னதான் பேசிக்கொண் டிருந்தாலும் போதாது. எதைவிட எது மேல் என்று சொல்லுவதுதான் முக்கியம். ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளில் பல மரபு நூல்கள், நல்ல நூல் கள், classics அங்கீகரிக்கப்பட்டு விட்டன. அந்த மரபை வைத்து இன்று எழுதப்படுவதை ஓரளவுக்குத்

தர விமரிசனம் சொல்ல முடிகிறது. தமிழிலே வசன இலக்கியமே சமீப காலத்தில் ஏற்பட்டதுதான். நாவல், சிறுகதை போன்ற துறைகள் மிகவும் புதுசு. ஆரம்ப முதலே களை பிடுங்கி, நல்லதைப் பேணி வளர்க்காவிட்டால், களைதான் மிஞ்சும். நாவலில் நடுக்காலத்தில் பொழுதுபோக்குத் தழுவல் நாவல் தோன்றி நம்மை ஒரு அழுத்து அழுத்தி விட்டது. இன்னமும் நாம் G. W. M. Reynolds மோகத்தி லிருந்து விடுபட்டு விட்டோம் என்று சொல்ல முடியாது. சிறுகதையோ, நாவலையும் மற்ற இலக் கியத் துறைகளையும்விட மிகவும் சிரமமான துறை. இதிலே ஓரளவு வளம் ஏற்பட்டிருக்கிறது. ஆனாலும் காளான்களும் புல்லுருவிகளும் ஏகமாகவே இருக் கின்றன. நல்ல சிறுகதை என்று நாலு சொன்னால் நாற்பது நன்றாக இராததையும் சேர்த்துச் சொல்லு வது என்பது நமக்குப் பழக்கமாகிக் கொண்டிருக் கிறது. நல்லதை விட்டுவிட்டு நடுத்தரமானதைக் கவனிப்பதிலேயே நாம் நமது நேரத்தைச் செல விட்டுக் கொண்டிருக்கிறோம். அதை மாற்றுவதற்கு இலக்கிய விசாரம் அவசியம். நேர்மையான தர விமரி சனம் செய்துதான் சிறுகதையைப் பற்றிய வளத்தை மேலே வளர்க்க முடியும். சிறுகதை இன்று பத்தி ரிகைச் சதுப்பு நிலத்திலே கால் விட்டு விட்டுத் தேங்குவதற்கே காரணம், இலக்கிய விசாரம் சரி யான முறையில் வளராததுதான் என்று எனக்குத் தோன்றுகிறது.

மணி: உண்மையில் நல்ல தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பு என்று இதுவரை ஒன்றுமே வெளிவந்ததாகத்

தெரியவில்லையே! ஆங்கிலத்தில் எத்தனையோ சிறு கதைத் தொகுப்புக்கள் இருக்கின்றன. எல்லாமே நன்ருக இருப்பதாகச் சொல்ல முடியாது என்ருலும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோணத்திலிருந்து நமக்குச் சிறுகதை வளத்தைக் காட்டத்தான் காட்டு கின்றன.

ராஜா: ருஷ்யச் சிறுகதைகள், இத்தாலியச் சிறுகதை கள், ஜெர்மன் சிறுகதைகள் என்று எத்தனையோ சிறுகதைத் தொகுதிகள் நான் பார்த்திருக்கிறேன். தொகுப்புகளாக அவை திருப்திகரமாகவேதான் இருக்கின்றன.

மணி: அவற்றைப் படித்து நாம் ஓரளவு அந்தந்த மொழியில் சிறுகதை வளத்தை அறிந்துகொள்ள முடிகிறது என்றுதான் சொல்ல வேண்டும். அந்த மாதிரி தமிழில் ஒரு தொகுப்புக்கூட இல்லாதது பெருங் குறைதான்.

ராஜா: சிறுகதையாவது புது இலக்கியத் துறை. இன்னும் சரியானபடி எதுவும் அதில் நிர்த்தாரண மாகவில்லை என்று சொல்லலாம். தமிழில் பழங் கவிதையைப்பற்றி என்ன? இடைக்காலக் கவிதை யைப்பற்றி என்ன? பிற்கால வசனத்தைப் பற்றி என்ன? எல்லாமே இனிமேல்தான் இலக்கியமாகத் தர விமரிசனம் செய்யப்பட வேண்டும். எல்லாவற் றையுமே சகட்டுமெனிக்கு ஒரே மாதிரியாகக் கருது வதுதான் நமது வழக்கமாக இருந்து வருகிறது. எல்லாம் இலக்கிய உலகத்தில் ஒரே தரம்தான் என்று சொல்வது சரியேயல்ல.

மணி: உண்மைதான். இப்படிச் சொன்னல் ஒப்புக் கொள்ளுபவர்கள்கூடச் சிலப்பதிகாரத்தையும், கம்ப ராமாயணத்தையும், பெரிய புராணத்தையும், திரு விளையாடற் புராணத்தையும் இலக்கிய நோக்கில் ஒரே தரமாகத்தான் கருதுகிருர்கள் என்பது வெளிப் படை.

ராஜா: அப்படிக் கருதுவது நல்ல பக்தியாக இருக்க லாம்—நல்ல தமிழ்ப் பக்தியாகவும் கூட இருக்கலாம். ஆனல் அது நிச்சயமாக நல்ல இலக்கிய விசாரம் ஆகாது. இதிலே எல்லாம் தராதரங்கள் கண்டு, நிர்த்தாரணம் செய்வது இன்றைய இலக்கியத்தை வளர்ப்பதற்கு மிகவும் சிறந்த வழி.

மணி: பழசு இல்லாமல் புதுசு வளராது என்கிற கட்சி யைச் சேர்ந்தவன்தாஞ நீயும்? அப்படி எண்ணி யிருக்கவில்லை நான்.

ராஜா: பழசில்லாமல் இலக்கியத்தில் புதுசு என்பதே கிடையாது. புதுசு என்பதற்கே வியாக்கியானம் பழசு அல்லாதது என்றுதானே அர்த்தம்? அந்தப் பழசு இருந்தால்தானே, பழசு அல்லாதது என்று ஒன்று இருக்க முடியும்.

மணி: உண்மைதான்.

ராஜா: நல்ல புதுசைச் சாத்தியமாக்குகிற பழமையே நல்ல பழமை. இலக்கியத்தில் மரபு என்பது ஆணி வேர்—அடிப்படையான ஒரு விஷயம். இந்த மரபை மீறி, இன்றைய புதுமையைச் செய்து, நாளைய மரபை உண்டாக்குபவன்தான் நல்ல இலக்கியாசிரியன். இன்றைய பெரும் புரட்சிக்

காரன் நாளைய இலக்கிய மரபிலே ஒன்றிவிடுகிறான் என்பதுதான் இலக்கியம் நமக்குச் செய்து காட்டுகிற பெரும் புரட்சி.

மணி: புரட்சிக்காரனின் இலக்கியப் புரட்சி எட்டு நாளைக்குத்தான் என்கிறாய். ஒன்பதாவது நாள் அந்தப் புரட்சியே பழமையான மரபாகி விடுகிறது என்கிறாய்.

ராஜா: ஆமாம். சிலப்பதிகாரம் என்கிற தமிழ்க் காவியம் புரட்சிக் காவியமாக இருந்த ஒரு காலம் இருந்திருக்கத்தானே வேண்டும். இன்று அந்தப் புரட்சி ஏற்றுக்கொள்ளப்பட்டதாகிவிட்டது.

மணி: அவர் காலத்திலே இருந்த காவிய விதிகளை யெல்லாம் மீறிக் காவியம் செய்தவர் சிலப்பதிகார ஆசிரியர். பெண்ணைக் கதைக்கு நாயகனாக வைத்து, மூன்று தமிழ் ராஜ்யங்களையும் சேர்த்துப் பாடிய துணிச்சல் மகத்தானதுதான்.

ராஜா: ஒவ்வொரு இலக்கியாசிரியனுடைய துணிச்சலுமே மகத்தானதுதான். ஆனால் அதையும்விட மகத்தான புரட்சி ஒன்று செய்தார் சிலப்பதிகார ஆசிரியர்—அதை இன்னும் தமிழர்கள் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

மணி: என்ன புரட்சி அது? புரட்சிகரமாக ஏதாவது சொல்வதிலே நீ நிபுணன் ஆயிற்றே, சொல்லு.

ராஜா: சாதாரணமாகக் கண்ணீர்த்துளி வர உள்ள முருக்குவதுதான் இலக்கியத்தின் நோக்கம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால்

இலக்கியத்தில் சிறந்தது எல்லாமே உணர்ச்சியைக் கிளப்புவதுடன் திருப்தியடைந்துவிடாமல் உணர்ச் சியைச் சமனப்படுத்துவதிலும் கவனம் செலுத்து கின்றன என்றுதான் சொல்ல வேண்டும்.

மணி: உணர்ச்சிக்கு அப்பால் போக வழி வகுக்க முயன்ற ஆசிரியர்கள் சிலர் உண்டுதான்.

ராஜா: இதை ஒரு இலக்கிய சித்தாந்தமாக முதல் தடவையாக ஜேம்ஸ் ஜாய்ஸ் தன்னுடைய A Potrait of the Artist as a Young Man-னில் எழுதினுன். இதற்கு உதாரணமாக, ஆசிரியன் ஒதுங்கி நின்று சாக்ஷிபூதமாகச் சொல்வதுடன், வாசகனேயும் சாக்ஷியாக்கிக் காட்டுகிற காரியத்தைத் தமிழ் இலக்கியத்தில் சிலப்பதிகார ஆசிரியர் செய் திருக்கிருர் என்று எனக்குத் தோன்றுகிறது.

மணி: சுவாரசியமான விஷயம்தான். இதை இன்னும் தீவிரமாக விசாரித்தே தீரவேண்டும் என்று எனக்கும் தோன்றுகிறது.

ராஜா: சங்க நூல் கவிதையிலெல்லாம் இந்த உணர்ச்சி வசப்படாதிருக்கிற காரியம் ஓரளவுக்குப் பரிசோத னைக்குள்ளாகி வந்திருக்கிறது என்று நாம் கொள்ள லாம், பக்திப் பரவசமாகி ஒரு சாரார் பாடிக்கொண் டிருந்த அதே சமயத்தில்; அதே தமிழில், ஒருவர் பற்றில்லாது பாடிஞர் என்பது சிறப்பான விஷயம். சிலப்பதிகார ஆசிரியர் பற்றறுத்த துறவி என்கிற கதையே இதனுல்தான் ஏற்பட்டதோ என்றுகூட எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

மணி: கம்பராமாயணமும் உணர்ச்சியைத் தூண்டி சமனப்படுத்துகிற நூல் என்றுதானே சொல்ல வேண்டும்?

ராஜா: அதிலே உணர்ச்சியையே எல்லையாகக் கொண்ட பகுதிகள் பல இருக்கின்றன. ஆனல் பொதுஜன அபிப்பிராயத்தில் நாடகப் பகுதிகள் என்று புகழ் பெற்ற பல பகுதிகளில் உணர்ச்சியைத் தாண்டிச் செல்லும் அவசியம் நேருகிறது கம்பனுக்கு. அப்படி உணர்ச்சியைத் தாண்டிச் செல்லுகிற காரியத்தை எப்படிக் கவி சமாளிக்கிறன் என்பதைக் கவனிக்கும்போது, ஒரு விஷயம் நமக்குத் தெளிவாகிறது.

மணி: என்ன?

ராஜா: கவிதையை உணர்ச்சிப் பொருளாகவும், உணர்ச்சிக்கு அப்பாற்பட்ட பொருளாகவும் உணர்ந்து கவிதை செய்ய பழங்காலத்தில் தமிழர்கள் முயன்றிருக்கிறர்கள். சங்க இலக்கியத்துப் பாடல்களிலே உணர்ச்சியில்லை என்பது சாதாரணமாக எல்லோரும் ஏற்றுக்கொண்ட விஷயம். உணர்ச்சிக்கு அப்பால் அந்தக் கவிகள் போக முயன்றதால் ஏற்பட்டதா அது அல்லது ஒரு குறைபாடா என்பது இலக்கிய விமரிசன பூர்வமாகத் தீர்மானமாக வேண்டிய விஷயம்தான். இலக்கியத்தின் நோக்கத்தை, இலக்கியத்தின் அமைதியை அவர்கள் எப்படி வகுத்துக் கொண்டிருந்தார்கள் என்பதை இலக்கிய விசாரத்தின் மூலம் நாம் தெளிவாக்கிக் கொள்ளவேண்டிய அவசியம் இப்போது உண்டு.

மணி: அதை எப்படிச் செய்ய முடியும் என்று பார்ப்பது அவசியம் அல்லவா?

ராஜா: இலக்கிய மரபுகள். ஏற்றுக்கொள்ளப்பட்ட இலக்கண முடிவுகள், இதற்கு அர்த்தம் இதுதான் என்கிற முடிவு கட்டிய முடிவுகளை எல்லாம் அப்பால் வைத்துவிட்டுக் கவிதையாகப் பழம் நூல்களைப் பார்த்து இலக்கிய விசாரம் செய்ய வேண்டியது அவசியம். மரபுகள், இலக்கணம் எல்லாம் இலக்கியப் புரட்சியை மங்கச் செய்ய உபயோகப்படுமே தவிர, இலக்கியத்தை வளர்க்க உபயோகப்படாது.

மணி: அதாவது பண்டிதர்கள் என்று சொல்லப்படுபவர்களின் கைகளிலிருந்து பண்டைத் தமிழ் இலக்கியத்தை மீட்க வேண்டும் என்று சொல்லுகிருய்—இல்லையா?

ராஜா: சிறை மீட்க வேண்டும் என்று சொல்லுகிறேன். அதாவது பண்டிதர்கள் எந்த மொழியிலுமே ஒரு காரியத்துக்குத்தான் உபயோகப்படுகிருர்கள்—அதாவது பழசைப் பழசாகவே அறிந்துகொள்ளத்தான் உபயோகப்படுகிருர்கள். ரொம்பப் பழசும்கூட, இன்றையப் புதுசையும் விடப் புதுசாக இருக்கிறது என்பதுதான் இலக்கியத்தின் சிரேஷ்டமான அடிப்படைகளில் உண்டு. கல்லூரிகளிலோ, குருமுகமாகவோ படித்து இலக்கிய அறிவு வளராது என்பது பல தலைமுறைகளாக நிதரிசனமான ஒரு விஷயம். முறையாகப் படிக்காதவர்களே இலக்கிய ரஸனையை விருத்தி செய்யமுடியும். புலவர்கள் அறிவுச் சுமையைத் தாங்கலாம்—பிரமாதமான வியாக்கியானகர்த்தர்களாக இருக்கலாம். ஆனல்

அவர்கள் நல்ல இலக்கிய விசாரகர்களாக இருக்க முடியாது என்பது உண்மை. ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மொழிகளிலும்கூட இது அங்கீகரிக்கப்பட்ட ஒரு விஷயம்தான். ஆகவே தமிழ்ப் பழமையை இலக்கிய விசாரகர்கள் அணுக முயலவேண்டும். அப்போதுதான் அது இன்று நமக்கு உபயோகப் படக்கூடிய புதுசு ஆகும்.

மணி : தர விமரிசனம், தராதரம் பார்த்து விமரிசனம் சொல்வது என்பது எல்லாம் தமிழில் புதுசில் எப்படியில்லையோ அப்படியே பழசு பற்றியும் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். அதை முதலில் செய்யவேண்டும் என்கிறாய் நீ....

ராஜா : முதலில், உடனடியாக, அவசியம் என்பதற் கெல்லாம் இலக்கியத்தைப் பற்றிய வரையில் அர்த்தமே கிடையாது. அததற்குரிய மேதையின் கையில், அதற்கு உரிய காலத்தில் நடக்கும். நடக்கா மல் மட்டும் இருந்துவிடாது என்பது நிச்சயம். இலக்கியம் விஸ்தீரணம், ஆழம், அகலம், என்கிற மூன்று எல்லைகளில் மட்டும் நிர்மாணமாவதில்லை. காலம் என்கிற நாலாவது எல்லையாலும் தீர்மானிக் கப்படுகிறது. காலப் போக்கு என்பது மட்டுமல்ல; நிமிஷம் நித்தியமாகிறது என்கிற அர்த்தத்திலும் காலம் ஒரு எல்லை. அதை மறந்துவிட்டு நாம் எது வும் செய்யவோ சொல்லவோ முடியாது.

மணி : காலதேவன் லோபியல்ல என்பதும் உண்மை தான்.

ராஜா : உண்மைதான். மொழிப்பற்று என்பது ஒரு குறுகிய காலத்தில் கொடுங்கோலாட்சியே செலுத்து

கிறது. அந்த மொழிப்பற்று ஒரு இலக்கியத்துக்குப் பெரும் தீமையே விளைவிக்கலாம். ஆனல் கால தேவன் காப்பாற்றுகிருன். மொழிப்பற்றும் ஆர்ப் பாட்டங்களும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கப்பால் எந்தப் பிராந்தியத்திலும் போனதில்லை. மொழிப் பற்று இலக்கியப் பற்ருகிற காரியம் சிறுகச் சிறுகத் தான் நடக்கும்.

மணி: அந்தக் காரியம் இப்போது நடந்துகொண் டிருக்கிறது என்று சொல்லுகிருயா?

ராஜா: இல்லை. இன்னும் நடக்க ஆரம்பிக்கவே யில்லை அது. ஒரு இரு நூறு வருஷங்கள் தமிழ்ப் பழமையையும் தமிழ்க் கவிகளையும் மறந்துவிட் டிருந்த தமிழன் பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியிலே, அதையெல்லாம் ஒரு புது வேகத் துடன் கண்டு கொண்டான். தான் செய்த பாவத் துக்கே பிராயச்சித்தமாக மொழிப்பற்றை ஒரு தீவிர வேகத்துடன் கையாண்டான். இந்த வேகத்தின் முதல் கலையாகத்தான் சுப்பிரமணிய பாரதி தோன்றினர்.

மணி: பாரதியாரை இலக்கிய மதிப்பீடு செய்து பார்த் தால்....?

ராஜா: அதற்கு இன்னும் காலம் வரவில்லை என்று தான் சொல்லவேண்டும். ஏனென்ருல் கவி பாரதி யார் தந்த வேகத்தைக்கொண்டுதான் இன்று தமிழிலே எல்லாத் துறைகளிலுமே மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்த மறுமலர்ச்சியில் அகப் பட்டுக் கொண்டிருக்கிற நாம், பாரதியாரை இலக்கிய மதிப்பீடு செய்து இன்று பார்ப்பதென்பது கைகூடி

வராத ஒரு காரியம் என்றுதான் சொல்ல வேண்டும். பாரதி தந்த வேகத்திலிருந்து தனித்து நின்று நம்மால் இப்போது இலக்கிய விசாரம் அவரைப் பற்றியே செய்ய முடியாது என்பது தெரிகிறது.

மணி: அதனுல்தான் பாரதியாரைப்பற்றி எழுதப்படுகிற நூல்கள் எல்லாம் இலக்கியமாக, இலக்கிய விசாரமாக வெற்றிபெற வில்லை என்கிருயா நீ? பாரதி என்கிற மனிதனையும், பாரதி என்கிற வேகத்தையும் பற்றிப் பேச முடிகிறதே தவிர, பாரதி என்கிற இலக்கியத்தைப்பற்றிப் பேச முடியவில்லை என்கிருயா?

ராஜா: ஆமாம். இலக்கியத்தால் மட்டுமின்றி, தன் எழுத்தால் மட்டுமின்றி, காலத்தின் ஒரு திருப்ப கோணத்தால் முக்கியத்துவம் பெறுகிறவர் பாரதி, அதனுல் இந்தக் காலத்தின் திருப்ப வேகம் தணியத் தொடங்கிய பிறகுதான் அவரை இலக்கிய மதிப்பீடு செய்து கவியாகவும், வசனகர்த்தாவாகவும், பல துறைகளில் பரிசோதனை செய்து பார்த்த இலக்கியாசிரியனுகவும் நாம் அறிந்து கொள்ளமுடியும். அதற்குக் காலம் இன்னும் வரவில்லை. இன்னும் இரண்டொரு தலைமுறைகள் ஆகும் என்றே எனக்குத் தோன்றுகிறது.

மணி: அப்படி இலக்கிய விசாரம் செய்ய வேண்டிய அவசியமுண்டு என்றுதான் நீ சொல்லுவாய், இல்லையா?

ராஜா: இலக்கிய விஷயம் எதையும் இலக்கிய பூர்வமாக விசாரம் செய்து அறிந்துகொள்ள வேண்டிய

அவசியம் எப்போதுமே உண்டு. இன்னமும் பாரதிக்கு முந்திய இரு நூறு வருஷங்களைப் பற்றிச் சரிவர அறியவே நாம் முற்படவேயில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் செய்திகள் கிடைத்துக் கொண்டிருக்கின்றனவே தவிர, இன்றைய இலக்கியக் கண்ணோட்டத்திலிருந்து பெஷி முதல் பாரதியார் வரையில் தமிழில் வளத்தை, வசனத்தை விமர்சித்து, இலக்கியமாக அறிந்துகொள்ள எவ்வித முயற்சியும் நடைபெறவேயில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

மணி: தமிழைப் பற்றிய வரையில், இலக்கிய விசார நோக்கத்துடன் பார்க்கும்போது, இல்லை இல்லை என்று சொல்லுவதற்குத்தான் அதிகம் இருக்கிறதே தவிர, இருக்கிறது என்று சொல்லுவதற்கு அதிகம் அகப்படாது போல இருக்கிறதே!

ராஜா: எந்தக் குறிப்பிட்ட மொழி இலக்கியத்திலுமே ஒரு குறிப்பிட்ட கால வரம்புக்குள் கவனித்தால், இல்லை என்பதுதான் அதிகமாக இருக்க முடியும் என்பது தெளிவு தானே. செய்ய வேண்டியதை எண்ணும்போது, செய்திருப்பது, செய்து கொண்டிருப்பது மிகவும் சொற்பம் என்றுதானே சொல்ல முடியும்?

மணி: ஏதோ பத்துப் பன்னிரண்டு சிறுகதாசிரியர்கள், நாலைந்து நாவலாசிரியர்கள், பழசில் ஒரு பகுதி என்று மிகவும் ஸ்வல்பமாகத்தானே நீ ஏற்றுக் கொள்ளுகிறாய்?

ராஜா: நான் ஏற்றுக் கொள்ளுவதுதான் இலக்கியம் என்பதல்ல. என்னைப் போலப் பத்தாயிரம் பேர்

தனித்தனியாக ஒருவர் ஒருவராக ஏற்றுக்கொள்ளுவதுதான் இலக்கியம் என்ருகிறது. வோட்டெடுப்பதில்லை இது. இலக்கிய அபிப்பிராய பேதம் வளருகிற விதம் இதுதான். மெதுவாக மௌனத்தில் இலக்கியம் வளர்ந்து உருப்பெறுகிறது. ஆர்ப்பாட்டங்கள் எதுவும் இல்லாமல், அமைதியாக வளருகிறது. ஒரு இலக்கிய நூலை அது வெளிவந்தபோது ஒருவர்கூடப் படித்திருக்காமலும் இருக்கலாம். அதற்காக அது 2058-இல் இலக்கிய அந்தஸ்தை எட்டியிராது என்று சொல்லிவிட முடியாது.

மணி: அதற்கு மாருக வெளிவந்த வுடனே மூன்று வர்ணங்களில் வெளியிடப்பட்டு, லக்ஷோப லக்ஷம் பேர் வாசிக்கிற நூல்........

ராஜா: அடுத்த தலைமுறையிலேயே மறந்து போய் விடலாம் என்பது இலக்கிய நியதி. மறந்துபோயே தீரவேண்டும் என்கிற அவசியம் இல்லை என்ருலும் நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது இப்படித்தான் நடக்கும் என்று சொல்லவேண்டும். உடனடியாகப் பலருக்கு ஏற்கும் நூல் இலக்கிய அம்சங்கள் அதிகமில்லாமல்தான் இருக்கவேண்டும் என்பதே ஒரு இலக்கிய நியதிபோலத் தோன்றுகிறது. காலத்துக்கு ஒத்த நூல்கள் பல, காலத்தை மீறி நிற்கச் சக்தியற்று விடுகின்றன.

மணி: அதே போலே ஒருவருமே படிக்காத நூல் இலக்கிய நூலாகத்தான் இருந்தாக வேண்டும் என்று நியதி ஒன்றும் இல்லை.

ராஜா: இல்லைதான். இப்படி இன்று படிக்கப்படாத நூல்களில் பத்தில் ஒன்றுதான் நூறு வருஷங்களில்

நிலைக்கலாம் என்பதுதான் உண்மை. இந்த இரண்டு உண்மைகளையும் மனத்தில் வைத்துக்கொண்டு இலக்கிய விசாரம் செய்வதுதான் நேர்மையானது.

மணி: இலக்கிய விசாரகனைக் கத்தி முனைமேல் நடக்கச் சொல்லுகிறாய் நீ.

ராஜா: ஆமாம். இலக்கிய விசாரம் என்பது சிரமமான துறைதான். ஆனால் சிறுகதையைப் போலவோ, நாவலைப் போலவோ, காவியத்தைப் போலவே திருப்தியளிப்பதில்லை என்பதும் உண்மை. எனக்கே மொத்தத்தில் இலக்கிய விசாரத்தில் ஈடுபாடும் உற்சாகமும் குறைவுதான். இருந்தும் என் அளவிலாவது செய்து பார்த்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறதே என்று செய்து பார்க்கிறேன்.

மணி: நாவலாசிரியனாக, சிறுகதாசிரியனாக, கவியாக இருப்பது இலக்கிய விசாரகனாக இருப்பதைவிட மேல் என்கிறாயா ?

ராஜா: மேல், கீழ் என்று இலக்கியத் துறைகளில் ஒன்றுக்கொன்று வித்தியாசம் பாராட்டுவதற்கில்லை. நான்கு துறைகளுமே—இன்னும் நாடகம், கட்டுரை முதலிய துறைகளையும் சேர்த்துக்கொள்—ஒரே தரத்தவைதான். ஒரு சமயம், ஒரு காலப் போக்கில் ஒரு துறை சிறப்பாக வளருகிறது; ஒரு காலத்தில் மங்குகிறது.

மணி: தமிழில் நாடகங்கள் இன்று மங்கியுள்ள காலம் தான் இல்லையா ?

ராஜா: நாடகத்தை ஒரு இலக்கியப் பகுதியாக இன்னமும் நாம் அறிந்து கொள்ளவில்லை என்று

தான் சொல்லவேண்டும். மேடைக் கலையாக அறிய வும் வளர்க்கவும் முற்படுகிறோம்—அது போதாது. முதலில் நாடகம் இலக்கியமாக வளரவேண்டும்—பின்னரே அதில் மற்ற வளர்ச்சிகள் சாத்தியமாகும் என்று சொல்லலாம்.

மணி: நாடக இலக்கியமாக ஷேக்ஸ்பியரையும், கிரேக்க நாடகாசிரியர்களையும், சீனு, ஜப்பான், இந்திய நடுக் கால நாடகங்களையும், மேலை நாடுகளில் இப்ஸென், பெனுவண்டே தொடங்கி இன்றுவரை நடந்து வரு கிற முயற்சிகளையும் நாம் அறிந்து கொள்ள வேண் டியது மிகவும் அவசியம்தான்.

ராஜா: இதை எண்ணும்போதுதான் தமிழில் புது இலக்கியம் தழைத்தோங்க மொழி பெயர்ப்புகளின் அவசியம் தோன்றுகிறது. எந்த மொழி இலக்கியத் திலுமே புது இலக்கியம் சிறப்பாகத் தோன்றுகிற காலத்திலேதான், பிற நாட்டு மொழி இலக்கிய மொழி பெயர்ப்புகளும் ஏராளமாகத் தோன்றியிருக் கின்றன என்று சொல்லவேண்டும். சாதாரணமான எல்லோருக்கும் தெரிந்த உதாரணமாக ஷேக்ஸ்பிய ருக்குச் சற்று முந்திய ஆங்கில இலக்கிய காலத்தைச் சொல்லலாம்.

மணி: எனக்கு மொழிபெயர்ப்புகளைப் பற்றி எப்போ துமே ஒரு சந்தேகம். மொழிபெயர்ப்பு நூல்களை விமரிசிப்பவர்கள் அது தமிழில் முதல்நூலைப் போலவே மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள்—அது சரியா?

ராஜா: மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்புத்தான். அது முதல் நூலாகிவிடக் கூடாது. பிற மொழி அம்சங்

களும், பிற மொழி ஆசிரியனின் தனித்துவமும் தெரியத்தான் ஒரு நூலை மொழிபெயர்க்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். அப்போதுதான் தமிழுக்கு அந்த மொழிபெயர்ப்பினால் இலக்கிய உபயோகம் இருக்கும்.

மணி: அப்படியானால் இந்தத் தலைமுறைக்குச் செய்யப்பட்ட மொழி பெயர்ப்பு அடுத்த தலைமுறைக்குப் பயன்படாது என்று ஏற்படுமில்லையா?

ராஜா: ஏற்படும்தான். அதனால்தான் நல்ல நூலுக்கு ஆங்கிலம், பிரெஞ்சு போன்ற மொழிகளில் பல மொழி பெயர்ப்புகள் தோன்றுகின்றன. அது அவசியமே. ஏனென்றால் ஒரு மொழி பெயர்ப்பு என்றுமே முதல்நூலைப் பூரணமாக அயல்மொழி வாசகர்களுக்கு எடுத்துக்காட்ட முடியாது. நாலு பேருடைய தனி மொழி பெயர்ப்புகள் ஓரளவுக்கு முதல்நூல் நயத்தில் ஒரு முக்கால் வாசியை எடுத்துக் காட்டி விடும். தமிழிலிருந்து தமிழன் எதையாவது வேறு மொழியில் மொழிபெயர்த்துப் பார்த்தானானால் நான் சொல்லுகிற உண்மை விளங்கும். கம்பனுக்கும், பாரதிக்கும் ஒரு மொழிபெயர்ப்பு மட்டும் போதாது என்பது தெளிவு. பலர் முயற்சி செய்யும்போது நிழல் போல முதல்நூலின் நல்ல அம்சங்கள் ஓரளவுக்கு கூட்டு முயற்சியாக வாசகன் மனத்தில் படியும்.

மணி: தமிழிலிருந்து பிற மொழிகளுக்குத் தருவதற்கு இன்றைய இலக்கியத்தில் போதுமானது இருக்கிறதா ?

ராஜா: இருக்கிறது என்பதுதான் என் அபிப்பிராயம். இருபது முப்பது சிறுகதைகள், நாலைந்து நாவல்கள், மற்றும் பழைய இலக்கியத்தைப்பற்றிய புது விசாரம் இவற்றைப் பிற மொழிகளில் இன்று தமிழன் தர முயற்சி செய்யலாம்.

மணி: நீ நாள் பூராவும் இலக்கிய விசாரம் செய்து கொண்டிருப்பாய்; கவலையற்ற மனிதன். எனக்குக் கொஞ்சம் அலுவல் இருக்கிறது, நான் போய் வருகிறேன்.

ராஜா: போய் வா.

மணி: தமிழ் வாழ்க.

ராஜா: தமிழ் என்றும் வாழும். என்றுமுள தென்றமிழ் என்றுதான் எழுதி வைத்திருக்கிறார்களே! தமிழில் இலக்கியம் வாழ்க, வளர்க என்று வாழ்த்து. அது இப்போது மிக அவசியம்.

திருவல்லிக்கேணி 1958

# அந்நிய மொழி இலக்கியம்,

## இலக்கியாசிரியர்கள் பற்றிய குறிப்புகள்

**பக்கம் 5.** கிரேக்க இலக்கிய ஆதாரம் :

இன்றைய ஐரோப்பிய மொழிகள், மொழி இலக்கியங்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக அமைந்துள்ளன என்று கிரேக்க மக்களையும், அவர்கள் பண்பாட்டையும், மொழியையும், இலக்கியத்தையும் சொல்ல வேண்டும். கிரேக்கர்களுடைய ஆதி கவி ஹோமர். இலியாது, ஓடிஸ்ஸி என்று இரண்டு மஹா காவியங்களை எழுதியவர். காலம் சற்றேறக்குறைய கிறிஸ்துவுக்கு முன் ஆயிரம் ஆண்டுகள். அதிலிருந்தே சற்றேறக்குறைய ஒரு 800 ஆண்டுகள் கிரேக்க இலக்கியம் தொடர்ச்சியாக வளம் பெற்றிருந்தது. சிறப்பாக கிரேக்க நாடகாசிரியர்கள் **ஏஷ்கிலஸ், ஸோபாக்ளிஸ், யூரிபிடிஸ், அரிஸ்டபேன்ஸ்** முதலியவர்களையும், கிரேக்க கவிகள் **பிண்டார், ஸாபோ, அநாக்ரியான், தியாக்ரிடிஸ், பையான், மாஸ்கஸ்** முதலியவர்களையும், தத்துவ தரிசிகளான **ஸாக்ரடீஸ், பிளாடோ, அரிஸ்டாடில்** முதலியவர்களையும், சரித்திராசிரியர்கள் **ஹெரோடோடஸ், துசிடைடிஸ்** முதலியவர்களையும் கிரேக்க இலக்கியப் பண்பையும் வளத்தையும் சாத்தியமாக்கியவர்கள் என்று சொல்லுவார்கள். கிரேக்க சிந்தனையும் இலக்கியமும் (இன்று இந்திய சிந்தனைக்கும் இலக்கியத்துக்கும் சம்ஸ்கிருதம் அடிப்படையாக அமைந்திருப்பது போல) ஐரோப்பிய இலக்கியத்துக்கும், பண்புக்கும் அடிப்படையாக அமைந்திருக்கிறது.

,, **6.** டாண்டே : (டாண்டே அலிகியரி 1265–1320)

இத்தாலியக் கவி. **தேவ நாடகம்** என்கிற மஹா காவியத்தை இத்தாலிய மொழியில் இயற்றியவர். பியாட்ரிஸ் என்கிற ஒரு சிறுமியைக் காதலித்து'

அவளைத் தமது இருபதாவது வயதிலே நெருங்கவே நெருங்காமல் இழந்துவிட்ட டாண்டே தனது மஹா காவியத்தை அவள் காதல் நினைவாகப் பாடியதாகச் சொல்வது வழக்கம். உலகத்துச் சிறந்த கவிகளில் ஒருவர் என்பதை யாரும் ஆக்ஷேபிக்க முடியாதபடி கவிதை செய்தவர். ஷேக்ஸ்பியர், ஹோமர், டாண்டே இவர்களை ஐரோப்பிய இலக்கியத்தின் திரிமூர்த்தி களாகச் சொல்லவேண்டும். நரகம், பாபம் போக்கும் நடுலோகம், சுவர்க்கம் என்று மூன்று காண்டங்களாக மூன்று உலகங்களையும் கற்பனையில் கண்டு எழுதிய காவியம். தெய்வீகமான கிறிஸ்தவ அடிப்படை அன்பை அழகாகச் சொல்லும் நூல்.

**பக்கம் 7. கில்காமெஷ் :**

கி. மு. 2000 ஆண்டு வாக்கில் கல்லில் பொறித்து வைக்கப்பட்ட ஒரு காவியம். முழுவதும் கிடைக்க வில்லை. எனினும் கிடைத்துள்ளதிலிருந்து ஒரு வீர புருஷனின் திவ்ய சரிதமாக அது உருவாகியிருந்தது தெரிய வருகிறது. இந்தக் காவியம் இக்காலத்தில் தெரிய வந்ததையே ஒரு பெரிய காவியமாகக் கருத வேண்டும்—அத்தனை தூரம் சிரமப்பட்டுப் புதை பொருள் ஆராய்ச்சிக்காரர்கள் மெஸபடோமியா பிர தேசத்தில் கண்டெடுத்த புதையல். கிழக்கு ஆசிய மக்களின் காவியம் இது.

**,, 12. கிரேக்க நாடகாசிரியர்கள் :**

ஏஷ்கிலஸ் (கி. மு. சுமார் 525 – 455), ஸோபாக் ளிஸ் (கி. மு. சுமார் 495 - 405), யூரிபிடீஸ் (கி. மு. சுமார் 484 - 407) மூவரும் சோக நாடகாசிரியர்கள் என்று பெயர் பெற்றவர்கள். அரிஸ்டபேன்ஸ் (கி. மு. 447 - 385) ஹாஸ்ய, கேலி நாடகாசிரியர்.

**,, 12. ஷேக்ஸ்பியர் : (1564–1616)**

ஆங்கில மொழியில் எழுதிய கவி, நாடகாசிரியர். உலகத்திலேயே ஈடு ஜோடு இல்லாத கவி என்று விமரிசகர்களிடையேயும், பொதுஜனத்திடையேயும்

புகழ் பெற்றவர். ஷேக்ஸ்பியர் பற்றி எழுதப்பட்டிருக்கிற நூல்கள் மட்டுமே ஒரு பெரிய வாசக சாலையை நிரப்பிவிடும். முப்பத்தைந்து நாடகங்கள் எழுதியிருக்கிறார். அவர் வாழ்க்கை விவரங்கள் சரிவரத் தெரியாமல் இருப்பதால், 'இந்த நாடகங்களை ஷேக்ஸ்பியர் எழுதவில்லை, வேறு யாரோ எழுதினார்கள்' என்று கூடச் சொல்வதுண்டு. ஹாம்லெட், மாக்பெத், லியர் முதலிய சோக நாடகங்களும், டெம்பெஸ்டு (புயல்), விண்டர்ஸ் டேல் (மாரிக்காலக் கதை) முதலிய இன்பவியல் நாடகங்களும், பல சரித்திர நாடகங்களும், ஹாஸ்ய நாடகங்கள், காதல் நாடகங்கள் முதலியனவும் எழுதினார்.

இதே பக்கத்தில் கடைசிப் பாராவில் வருகிற சவக் குழி தோண்டுபவர்களும், பொலோனியஸும் ஷேக்ஸ்பியர் நாடகமாகிய ஹாம்லெட்டில் வருகிற புகழ்பெற்ற பாத்திரங்கள்.

பக்கம் 17. **செர்வாண்டிஸ்:** *(மைகேல் செர்வாண்டிஸ் 1547–1616)*

இஸ்பானிய மொழியில் எழுதியவர். இவருடைய டான் க்விக்ஜோட் என்கிற நாவல் ஐரோப்பாவிலே ஒரு சகாப்தத்தை முடித்து வைத்து வேறு ஒரு சகாப்தத்தை ஆரம்பித்து வைத்தது என்று சொல்லுவது வழக்கம். அதையேதான் ஐரோப்பிய நாவல் இலக்கியத்தில் முதல் நாவல் என்றும் சொல்லுவார்கள். க்விக்ஜோட் என்கிற பெயரே ஒரு வார்த்தையாகி லக்ஷிய புத்தியும் பைத்தியக்காரத்தனமும் உள்ளவன் என்கிற கலவையாகி ஐரோப்பிய மொழிகளிலே இடம் பெற்று விட்டது.

„ 18. **டாஸ்டாவ்ஸ்கி:** *(பியடோர் டாஸ்டாவ்ஸ்கி 1821–1881)*

ருஷ்ய மொழியில் எழுதிய மேதை. நாவலாசிரியர்களிலே தனிச் சிறப்பு வாய்ந்தவர் என்று பெயர் பெற்றவர். அவருடைய குற்றமும் தண்டனையும்

கரமஸொவ் சகோதரர்கள், அசடன் முதலிய நாவல்களை நாவல் இலக்கியத்தின் சிகரம் என்று சொல்லலாம்.

பக்கம் **18.** டால்ஸ்டாய்: *(லியோ டால்ஸ்டாய் 1828-1910)*

ருஷ்ய மொழியில் எழுதிய ஞானி. அவருடைய **போரும் அமைதியும்** நாவல் இலக்கியத்திலே தனிப் பெரும் சிகரம். பல நாவல்களும் கதைகளும் எழுதிய டால்ஸ்டாய், லக்ஷியக் கொள்கைக்காகவும், கிறிஸ்தவ தத்துவங்களுக்காகவும் வாழ்க்கையில் அரும்பாடு பட்டவர்.

,, **18.** லாகர்லெவ்: *(ஸெல்மா லாகர்லெவ் 1858-1940)*

ஸ்வீடிஷ் நாவலாசிரியை. 1910-இல் நோபல் பரிசு பெற்றவர். அவருடைய **கெஸ்டாபெர்லிங் புராணம்** மிகவும் உயர்ந்த ஒரு நாவல்.

,, **18.** மெல்வில்: *(ஹெர்மன் மெல்வில் 1819-1891)*

ஆங்கிலத்தில் எழுதிய அமெரிக்க ஆசிரியர். அவருடைய **மோபி டிக்** ஒரு திமிங்கில வேட்டைக் கதை.

,, **18.** பால்ஸாக்: *(ஹொனேர் டி பால்ஸாக் 1799-1850)*

பிரெஞ்சு மொழியில் எழுதிய நாவலாசிரியர்.

,, **18.** டிக்கன்ஸ்: *(சார்லஸ் டிக்கன்ஸ் 1812 - 1870)*

ஆங்கிலத்தில் எழுதிய நாவலாசிரியர். இங்கிலாந்தின் மிகச் சிறந்த நாவலாசிரியர் என்று புகழ் பெற்றவர். தொடர்கதையாசிரியர்களிலே இலக்கிய மதிப்புப் பெற்றவர் என்று சொல்ல வேண்டும். இவருடைய நாவல்களில் **டேவிட் காப்பர்பீல்டு, ப்ளீக் ஹவுஸ், க்ரேட் எக்ஸ்பெக்டேஷன்ஸ், பிக்விக் பேப்பர்ஸ், ஆலிவர் ட்விஸ்டு** முதலியவற்றைச் சிறப்பாகச் சொல்வார்கள். அவருடைய ஒவ்வொரு நாவலுக்குமே பல்லாயிரக் கணக்கான அன்பர்கள் உண்டு.

,, **21.** ப்ளோபேர்: *(கஸ்டெவ் ப்ளோபேர் 1821-1880)*

பிரெஞ்சு மொழியில் எழுதிய நாவலாசிரியர். அவருடைய **மேடம் பவெரி** என்கிற நாவலுடன்தான்

உலக இலக்கியத்தில் யதார்த்தவாதம் ஆரம்பித்தது என்று சொல்வது வழக்கம். ஒரு வார்த்தைகூட அசைக்க முடியாதபடி எழுதினுர் என்றும் அவரைப் பற்றிச் சொல்லுவார்கள்.

**பக்கம் 22.** ஸ்டெந்தால் : *(ஹென்ரி பெய்ல், புனைபெயர் ஸ்டெந்தால் 1783-1842)*

*பிரெஞ்சு மொழியில் எழுதிய நாவலாசிரியர். ப்ளோபேரின் குரு என்று சொல்லலாம். "என்னை நூறு ஆண்டுகளுக்குப் பிறகே புரிந்துகொள்வார்கள்" என்ருர் அவர். அவருடைய நாவல்களில்* **கறுப்பும் சிவப்பும்** *மிகவும் உயர்ந்த நாவல்.*

,, **22.** ஸ்டேர்ண் : *(லாரன்ஸ் ஸ்டெர்ண் 1713-1768)*

*ஆங்கில மொழியில் எழுதியவர்.*

,, **22.** ஜாய்ஸ் : *(ஜேம்ஸ் ஜாய்ஸ் 1882-1941)*

*ஆங்கிலத்தில் எழுதிய ஐரிஷ்காரர். இருபதாம் நூற்ருண்டிலே எழுதிய ஆங்கிலநாவலாசிரியர்களிலே சிறப்பான பரிசோதகராகப் புகழ்பெற்றவர்.* **கலைஞுைக ஒரு வாலிபனின் சித்திரம், யுலிஸிஸ், பின்னிகன்ஸ் வேக்** *முதலிய நாவல்களில் (?) செய்ய முடியாததையும் செய்யமுடியும் என்று செய்து காட்டியவர். அவர் பரிசோதனை ஐரோப்பாவின் 20-ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட மனேதத்துவ சித்தாந்த அடிப்படையில் செய்யப்பட்டது.* Stream of consciousness *என்கிற இலக்கிய உத்திக்கு முழு உருவமும் தந்தவர் ஜேம்ஸ் ஜாய்ஸ்.*

,, **23.** மான் : *(தாமஸ் மான் 1875-1955)*

*ஜெர்மன் மொழியில் எழுதிய நாவலாசிரியர். 1927-இல் நோபல் இலக்கியப் பரிசு பெற்றவர்.*

,, **23.** லாகர்க்விஸ்டு : *(பேர் லாகர்க்விஸ்டு 1882- )*

*ஸ்வீடிஷ் மொழியில் எழுதுபவர். கவி, நாடகாசிரியர், நாவலாசிரியர். நோபல் இலக்கியப் பரிசு பெற்றவர்.*

**பக்கம் 27.** பிரான்ஸ்: *(அநடோல் பிரான்ஸ் 1844-1924)*
*பிரெஞ்சு மொழி நாவலாசிரியர். நோபல் பரிசு பெற்றவர்.*

,, **27.** மோரியாக்: *(பிரான்ஸ்வா மோரியாக் 1879- )*
*நோபல் பரிசு பெற்ற பிரெஞ்சு நாவலாசிரியர்.*

,, **27.** காமு: *(அல்பர் காமு 1910- )*
*1957-இல் நோபல் பரிசு பெற்ற பிரெஞ்சு இலக்கியாசிரியர்.*

,, **29.** டூமாஸ்: *(அலெக்ஸாண்டர் டூமாஸ், தகப்பன் 1802-1870)*
*சரித்திர நவீனங்கள் ஏராளமாக, சர்வஜன ரஞ்சகமாக எழுதிய பிரெஞ்சு மொழி ஆசிரியர்.*

,, **29.** மெர்ரிக்: *(லியோனர்டு மெர்ரிக். வருஷங்கள் தெரியவில்லை.) சமீப காலத்திலிருந்த ஒரு ஆங்கில ஆசிரியர். பல சிறுகதைகளும், நாவல்களும் எழுதியவர்.*

,, **29.** லிட்டன்: *(லார்டு லிட்டன், பத்தொன்பதாம் நூற்றுண்டு) ஆங்கில நாவலாசிரியர்.*

,, **31.** ஆஸ்டென்: *(ஜேன் ஆஸ்டென் 1775-1817)*
*ஆங்கில நாவலாசிரியை.*

,, **31.** ஹார்டி: *(தாமஸ் ஹார்டி 1840-1928)*
*ஆங்கில நாவலாசிரியர். சோக நாவல்கள் பல எழுதியவர்.*

,, **41.** ஜேம்ஸ்: *(ஹென்ரி ஜேம்ஸ் 1843-1916)*
*ஆங்கிலத்தில் நாவல்களும், சிறுகதைகளும், விமரிசனமும் எழுதிய அமெரிக்க ஆசிரியர். ஆங்கில இலக்கிய விமரிசகர்களிலே சிறந்தவர் என்று சொல்ல வேண்டும்.*

,, **43.** செகாவ்: *(ஆண்டன் செகாவ் 1860-1904)*
*சிறுகதைகளும், நாடகங்களும் எழுதிப் புகழ் பெற்ற ருஷ்ய மேதை.*

பக்கம் **44.** மோபாஸான் : (கை டி மோபாஸான் 1850-1893)

ஸ்டெந்தால், ப்ளோபேர் இவர்களுடன் மோபாஸானையும் சேர்த்து பிரெஞ்சு மொழி இலக்கியத் திரிமூர்த்திகளாகச் சொல்வது வழக்கம். சிறுகதைகள், நாவல்கள் மூலம் நித்தியமான புகழ் படைத்தவர்.

,, **45.** காப்கா : (பிரான்ஸ் காப்கா 1883-1924)

செக்கோஸ்லவேகியாவில் பிறந்து ஜெர்மன் மொழியில் எழுதியவர். நாவல், சிறுகதை இரு துறைகளிலும் மிகவும் சிறப்பான பரிசோதகர் என்று சொல்ல வேண்டும். தான் எழுதியது எதையும் பிரசுரிக்க விரும்பாத மேதை. அவருடைய நண்பர் ஒருவரின் "சதி"யால் உலகுக்கு அவர் எழுத்துக்கள் கிடைத்தன.

,, **52.** ரெய்னல்ட்ஸ் : (G.W.M. ரெய்னல்ட்ஸ் 1809-1873)

இலக்கிய சரித்திரத்தில் இடம் பெறாத ஒரு ஆங்கில நாவலாசிரியர். பொதுஜன ரஞ்சகமாக எழுதியவர். சமூக சீர்திருத்த நோக்கமும், ஆண் பெண் உறவுப் பச்சையும் அவர் கலைத்திறன். டிக்கன்ஸ் காலத்தில் அவருடன் ஜனங்கள் மதிப்பில் போட்டியிட்டவர். முதலில் வங்காளத்திலும், பின்னர் தமிழ் நாட்டில் ஆரணி, வடுவூரார் இவர்கள்மூலமும் நிரந்தரமான இடம் பெற்று விட்டவர்.

,, **65.** இப்ஸன் : (ஹென்ரிக் இப்ஸென் 1828-1906)

இன்றைய ஐரோப்பிய நாடகத்தின் சிருஷ்டிகர்த்தா என்று போற்றப்படும் நார்வேய நாடகாசிரியர், கவி. கனமான பிரச்சினைகளை நேருக்கு நேர் தன் நாடகத்தில் உருவாக்கித் தந்தவர்.

,, **65.** பெனவண்டே : (ஜசிந்தோ பெனவண்டே 1866-1947)

இஸ்பானிய மொழி நாடகாசிரியர். நோபல் இலக்கியப் பரிசு பெற்றவர். "நாடகங்கள் படிப்பதற்கே எழுத வேண்டும்; நடிக்கப்படுவதற்காக மட்டும் எழுதப்படும் நாடகங்கள் அடுத்த தலைமுறை வரை இருக்க மாட்டா" என்று எழுபது வருஷ நாடக மேடை அனுபவத்திற்குப் பிறகு சொன்னவர்.

## ஆங்கிலப் பதங்களுக்கான விளக்கங்கள்

பக்கம் **20.** The novel is a mirror walking down the lane :

"நாவல் என்பது தெருவோடு தானாக நடந்து போகிற ஒரு நிலைக் கண்ணாடி". அதாவது சாதாரண தினசரி நடப்பு விஷயங்களை, தொடர்போ திட்டமோ அதிகமில்லாமல், பிரதிபலித்துக்கொண்டே செல்வது தான் நாவல் கலையின் அடிப்படை என்பது பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலே பிரெஞ்சு மொழியாசிரியர்கள் சிலரிடம் பரவியிருந்த அபிப்பிராயம். அதை ஒரு திட்டமான சித்தாந்தமாகச் சமீப காலத்தில் ஐரிஷ் நாவலாசிரியர்களும், இஸ்பானிய நாவலாசிரியர்களும் உபயோகித்து வருகிறார்கள்.

,, **25.** Magic Mountain: Joseph and His Brothers.

இரண்டும் தாமஸ் மான் எழுதிய நாவல்களின் பெயர்கள். முன்னதற்கு அர்த்தம் மந்திர மலை; பின்னதற்கு அர்த்தம் ஜோசப்பும் அவன் சகோதரர்களும். முதல்நாவல் ஐரோப்பாவிலே ஒரு காசநோய் ஸானடோரியத்தை நிலைக்களனாகக் கொண்டது. இரண்டாவது நாவல் பைபிளில் வருகிற ஒரு பாத்திரமாகிய ஜோசப்பையும் அவன் சகோதரர்களையும் அவர்களுடைய காரியங்களையும் நாலு பாகங்களாக, சுமார் 1500 பக்கங்களில் விவரிக்கிறது.

,, **29.** Serious ஆக, உண்மையில் கனமாக அதாவது அவர் நாவலாசிரியராக நமது கவனத்தைக் கவரவே வேண்டியதில்லை என்கிற அர்த்தம்.

,, **31.** Don Quixote.

டான் க்விக்ஜோட்-செர்வாண்டிஸ் எழுதிய நாவல்.

,, **31.** Much ado about nothing.

"சாரமில்லாமல் அதிகச் சந்தடி செய்வது" இது ஒரு ஷேக்ஸ்பியர் நாடகத்தின் பெயர்.

பக்கம் **40.** Socialist realism

சோஷலிஸ ரியாலிஸம்—யதார்த்தவாதம். ருஷ்யாவிலே சர்க்கார் அதிகாரத்துக்குட்பட்டு அனுமதிக்கப்படுகிற ஒரு இலக்கிய ரீதி. முற்போக்கு எழுத்து என்று நாம் சொல்வதில் சத்தில்லாத அம்சம்.

,, **47.** Flash back.

பின்னேக்கிச் சிந்திப்பது. நினைவுப்பாதை முறை என்று சொல்லலாம். இப்படிப் பல flash backs முன்பின் சேர்ந்து உருவாகியதை சினிமாவிலே montage என்று சொல்வார்கள். இந்த முறையைப் பின்பற்றி மனோதத்துவ அடிப்படையில் எழுந்தது stream of consciousness என்கிற இலக்கிய உத்தி.

,, **49.** Romantic.

யதார்த்தத்துக்கு எதிராக உள்ள ஒரு கனவு காவியத் தன்மை.

,, **50.** Personality.

முழுத் தனித்வம் என்று மொழி பெயர்க்கலாம். ஒருவரின் தனித்வம் பூராவும் உருவாகியபோது personality புலனுவதாகச் சொல்லலாம்.

,, **50.** Integrated personality.

பல துறை சேர்ந்தும் ஒருமுகப்பட்ட தனித்வம்; முழு அமைத்கண்ட உருவம்.

,, **51.** Classics.

ஒரு இலக்கியத்தின் மரபை நிர்மாணிக்கும் நல்ல நூல்கள் வரிசை. இது இலக்கிய விமரிசனத்தின் மூலமாகத்தான் நிர்த்தாரணமாக வேண்டும். விமரிசகன் சொல்லி வாசகன் தலைமுறை தலைமுறையாக ஏற்றுக்கொண்ட நூல்களே classics எனப்படும்.

,, **56.** A Portrait of the artist as a young man.

ஜேம்ஸ் ஜாய்ஸ் என்பவரின் முதல் நாவல். "வாலிபனுக ஒரு கலைஞனின் சித்திரம்" என்று அர்த்தம்.

# பொருள் அகராதி